# வெற்றிமேல் வெற்றிபெற...

சேம்சு ஆலன்

மொழியாக்கம்

த. கோவேந்தன் டி.லிட்.





# வெற்றி மேல் வெற்றி பெற...

ஆங்கில மூலம் :

சேம்சு ஆலன்

தமிழாக்கம் :

புலவர் த. கோவேந்தன் டி.லிட்




ராஜேஸ்வரி புத்தக நிலையம்

22, 6 ஆவது தெரு, பக்தவச்சலம் நகர்,

பழவந்தாங்கல், சென்னை-600 114.

முதற் பதிப்பு : திசம்பர், 1995



மொத்தப் பக்கங்கள் : 168

தயாரிப்பு : நா. பாலகிருஷ்ணன்

Tamil Translation From
THE DIVINE COMPANION
By
James Allen

விலை: ரூ. 32-00

அச்சிட்டோர் : சதுர்வேந்தன் அச்சகம்,
சென்னை-24.

# முன்னீடு

என்னைப் பண்படுத்தியவை புத்தகங்கள். அடுத்துத் தோழர் தங்கப்பா போன்ற நண்பர்கள். படிக்கத் தெரிந்த காலத்திலிருந்தே நான் ஒரு புத்தகக் காதலன். என் புத்தகக் காதலிகள் பன்முகம் கொண்டிருந்தாலும் அன்பொளி உடையவர்கள், நட்புணர்வு மிகுந்தவர்கள், ஒரு சொல்லில் சொன்னால் உண்மையானவர்கள்.

கரடு முரடான காளைப் பருவத்தில் கால் வைக்கும் முன், என் கையில் கிடைத்தது, நாட்டு விடுதலைக்குத் தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஈந்த வ. உ. சிதம் பரனாரின் ‘அகமே புறம்’ என்ற சேமசு ஆலனின் மொழியாக்க அரிய நூல். எனக்குக் கிடைத்த திருக்குறள் தொகுப்புரையும் வாழ்வியக்கத்தின் பேருரையும் அதுதான். பள்ளி இறுதி முடிந்ததும் 1950-இல் சேம்சு ஆலனின் ஆங்கில நூல்கள் அனைத்தும் ஒருசேர நடைபாதையில் பெற்றேன். அந்தக் காலத்தில்தான் கா. அப்பாதுரை யாரும் ஆலனின் சில நூல்களை மொழியாக்கம் செய்தார். ஆலனின் பாதி நூல்கள் வந்தன, எனினும் இப்போது பதிப்பில் இல்லை.

மொழியாக்கம் செய்யப்படாத நூல்களை மொழி பெயர்க்க எண்ணிய காலத்தில் சேம்சு ஆலனின் மனக் கருத்தெல்லாம் திரண்ட அன்புருவாய்த் தோழர் தங்கப்பா கிடைத்ததால் அவரையே என் உயிர்ப்பியக்கக் காதலி யாகக் கொண்டேன். ஆதலால் மொழியாக்கப் பணியில் ஈடுபடவில்லை.

நெஞ்சடைப்பு ஏற்பட்டுத் தவித்த வேளையில் (3-7-'95) மருத்துவமனையில் சேர்த்துதவியரும் அவரே. அறுவைப் பண்டுவதற்கு முன், எனக்குரிய குருதி கிடைக்காமல் காலம் தாழ்ந்தபோது சேம்சு ஆலனின் தெய்வீகத் தோழன் (Divine Companion) என்ற நூலைக் கொண்டு வர என் மனைவியிடம் கூறினேன். ஒரு விடியலிலேயே படித்து முடித்த அந்த நூலை, தங்கப்பா அருகில் இல்லாத நிலையில் அருள்திரு தயானந்தன் என்னைக் காணவும் நான் நலம்பெற வேண்டியும் வந்தார். மறுநாள் தெய்வீகத் தோழன்—நூலை மொழி பெயர்க்கத் தொடங்கினேன். அருட்செல்வர் பொள்ளாச்சி மகாலிங்கம் அரவணைப்பும் கிடைத்தது. நூல் ஒரு வாரத்தில் முடிந்தது.

என் உடன்பிறவாத் தம்பி வையங்காத்த பெருமான் (முனைவர். சாமி சகத்ரட்சகன்)ஓரிலகத்திற்குமேல் செலவு செய்து மருத்துவப் பேரறிஞர்—பரிவிரக்க மிக்க திரு. தணிகாசலனார் கண்காணிப்பில் அரிய உயரிய மருத்துவர், களால் புத்துயிர் பெறச் செய்தார். காலத்தால் செய்த உதவி ஞாலத்தினும் பெரிதன்றோ?

படுக்கையில் இருந்தபோதும் என் தலையணைக் கீழே இந்த வெற்றிமேல் வெற்றிபெற—தெய்வீகத் தோழன் உடனிருந்தான். என் நண்பரும்—நல்ல நூல் வெளியீட்டாளருமான திரு. பாலகிருஷ்ணன் நூலை வெளியிடுவதாகக் கூறினார். என் புத்தகக் காதலியின் உள்ளொளி கற்பவர் மனத்துள் புத்துணர்ச்சியையும் புத்தெழுச்சியையும் உண்டாக்கட்டும்.

நந்தம்பாக்கம் அ. நி.
சென்னை-600 089.

அன்பன்
த. கோவேந்தன்



காலத்தால் காத்துதவிக் காலனை வென்றிட
ஞாலத்தில் என்னை உயிர்ப்பித்த சீலர்,
அருட்செல்வர் அன்பின் தொடர்பறா மேன்மைப்
பொருட்செல்வர்க்கு இந்நூல் படைப்பு.

– த. கோவேந்தன்

# வெற்றிமேல் வெற்றி பெற...

## எழுச்சியுற வைக்கும் உண்மை

## 1

மகிழுங்கள்! பொழுது புலர்ந்தது... உண்மை நம்மை உறக்கத்திலிருந்து எழுப்பி விட்டது!

கண்களோ விழிப்புற்றன. தவறெனும் இருள்படிந்த இரவு இனிமேல் வரப் போவதில்லை.

காலா காலமாக நிகழ்வுகளிலும் உணர்வுகளிலும் உறங்கிக்கொண்டே இருந்து விட்டோம்.

தொல்லை தரும் தீய கனவுகளில் நீண்ட காலமாகப் போராடினோம்; ஆனால் இப்போது ஊக்கத்திலும் உண்மையிலும் விழிப்புற்றோம்.

நல்லது எது என்பதைத் தெரிந்து கொண்டோம்; அதனால் தீமையுடன் நிகழ்ந்து கொண்டிருந்த போராட்டம் முடிவுற்றது.

நாம் உறங்கினோம், இருந்தும்கூட நாம் உறங்கினோம் என்பது நமக்குத் தெரியவில்லை.

நான் துன்புற்றோம், இருந்தும் நாம் எதற்காகத் துன் புற்றோம் என்பது நமக்குத் தெரியவில்லை.

நம் கனவில், நாம் தொல்லைகளுக்குட் படுத்தப் பட்டோம், இருந்தும் நம்மை எவராலும எழுப்ப முடிய வில்லை. ஏனெனில், நம்மைப்போல் எல்லோருமே உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

பின்னர் நம் கனவில் ஓர் இடைவெளி ஏற்பட்டது.

நம் கனவு தடுத்து வைக்கப்பட்டுள்ளது; உண்மை நம்முடன் பேசியது, அதை நாம் கேட்டோம்.

ஆஆ! நமது கண்களைத் திறந்து நாம் பார்த்தோம். நாம் அயர்ந்து உறங்கியதால் எதையும் பார்க்க முடிய வில்லை; நாம் உறக்கத்திலிருந்ததனால் எதனையுமே அறியவில்லை.

ஆனால், இப்போது நாம் விழித்து எழுந்துள்ளோம். அதனால் பார்க்கிறோம்.

ஆம்! நமக்குத் தெரிகிறது நாம் எழுந்திருக்கிறோம் என்று. ஏனெனில் நாம் புனிதத் தன்மையைக் கண்டுள் ளோம்; அதனால் இனிமேல் நாம் தீவினையை விரும்ப மாட்டோம்.

உண்மையை நாம் உற்று நோக்கி உணர்ந்து கொண்டோம். அதனால் நம்மை ஈர்ப்பதிலிருந்து தவறு விடுபட்டது.

ஆம்! நாம் உண்மையைக் கண்டு கொண்டுள்ளோம்!

இரவில் காணும் கனவைப் போலல்லாமல் மெய் யாகவே நமது விழிப்புற்ற கண்களால் காண்கிறோம்.

தொலைவிலேயுள்ள ஓர் அழகான நிலமாகக் கண் டுள்ளோம்.

அதனை அடைந்து நமது உடைமையாக்கும்வரை நாம் தொல்லையுற்று முன்னேறிக்கொண்டே இருப்போம்.

எவ்வளவு மனநிறைவை நமக்கு அளிக்கிறது உண்மை!

மெய்ம்மையின் ஆட்சி எவ்வளவு புகழ்மிக்கது! புனிதத் தன்மையின் பேரின்பம் சொற்களால் சித்தரிக்க முடியாதது!

உண்மைக்காகவே தவற்றையும் மெய்மைக்காகவே பொய்த் தோற்றமளிக்கும் மாயையையும் உதறித் தள்ளி விட்டோம்.

தவற்றிகும் குழப்பத்திற்கும் புறமுதுகைக் காட்டியுள்ளோம்.

அறத்திற்கும் உண்மைக்கும் உள்ள ஒற்றுமைக்கு நாம் முகத்தைக் காட்டிக் கொண்டோம்.

## 2

கனவு காண்பது பாவம்.

பாவத்தை விரும்புவது இருளை விரும்புவதாகும்.

விழித்தெழுந்தவர்கள் அறிவார்ந்த செயல்களையே விரும்புகிறார்கள். ஆனால் கனவு கண்டு கொண்டிருப்பதையல்ல!

ஒளியைக் காட்டிலும் இருளையே விரும்பமாட்டார்கள்.

யார் இருளை விரும்புகிறார்களோ, அவர்கள் இருளிலேயே ஈடுபட்டிருப்பவர்களாகின்றனர்.

அவர்கள் இதுவரை ஒளியைக் காணாதவர்கள்

இருளைக் கண்டு கொண்டவர், இருளிலே நடந்து செல்ல விரும்ப மாட்டார்.

உண்மையை அறிய வேண்டுமானால், அதனை முழு மனத்துடன் விரும்பவேண்டும்; ஒப்பிடும்போது தவற்றுக்கு எவ்வித வனப்புமில்லை.

கனவு காண்பவன் இப்போது மகிழ்ச்சி அடைகின்றான், இன்னொரு வேளை துன்புறுவான்; இவ்வேளை நம்பிக்கையுடன் இருப்பான், அடுத்த வேளை அச்சத்துடன் இருப்பான்.

அவன் நிலையற்று இருக்கின்றான், ஏனெனில் அவனுக்கு நிலையான புகலிடமில்லை.

பரிவிரக்கம், வஞ்சம், தீர்ப்பு என்ற அச்ச உருவங்கள் அவனைத் துரத்தும்போது, அவனால் எங்கே விரைந்து ஓட முடியும்? விழித்து எழும்வரை அவனுக்குப் பாதுகாப்பான இடம் இல்லை.

கனவு கண்டு கொண்டிருப்பவன், கனிவுடன் போராடிக் கொண்டே இருக்கட்டும்.

தன்னலப் பற்றுள்ள எல்லா ஆசைகளின் பொய்த் தோற்றங்களை உணர்வதற்கு அவன் தொல்லைப் படட்டும்.

ஆம்! அப்போதுதான் ஒளியும் உண்மையும் நிறைந்த உலகின்மேல் தனது உள்ளொளிக் கண்களைத் திறந்து காண்பான்!

அவன் விழித்தெழுவான், எழுந்து எல்லாவற்றையும், அவற்றின் முறையான தொடர்புகளிலும் ஒன்றுக்கொன்றின் விழுக்காட்டு அளவிலும் இருப்பதைக் காண்பான்.

எல்லாமே அந்தந்த நிலையில் இருப்பதைக் காணும் போது, அறமுறை அறிவுள்ளவனாக அமைதி அடைகிறான்.

உண்மையே இப் புடவியின் (ஞாலத்தின்) ஒளி, மனத்தின் பகல்.

அதில் தவறில்லை, மனத்துன்பமில்லை, பயமில்லை. ஒரு பகலின் ஒளியினால் எவன் விழித்து எழுகின்றானோ, அவனின் கனவுகளினால் ஏற்படும் தொல்லைகள் அவனுக்குச் சுமையாகா.

விரட்டியடிக்கப்பட்ட பொய்த் தோற்றங்களாகவே கனவுகள் நினைக்கப் படுகின்றன.

விழித்தெழாதவன் விழித்தெழுவது பற்றியோ, கனவு பற்றியோ அறியான்.

அவன் குழப்பத்தில் இருக்கின்றான், அதனால் தன்னையே அவன் அறியான்.

மற்றவர்களையும் அறியான். அதனால், அவனின் தீர்வு அறிவற்றது, முறையற்றது.

விழித்தெழுந்தவன், விழிப்பைப் பற்றியும் கனவு காண்பது பற்றியும் அறிகின்றான்.

அறிவில் நன்கு தேர்ச்சி அடைந்து தன்னை அதில் நிலைப்படுத்திக் கொள்கின்றான்.

தன்னைத் தானே அறிந்து கொள்வதனால், அவன் மற்றவர்களையும் அறிந்து கொள்கின்றான்; அதனால், அறிவாற்றலுடன் பொறாமையாகவே தீர்ப்பை வழங்கு கிறான்.

அவனே எதையும் புரிந்துகொள்பவன், நெஞ்சங்களை அறிபவன்.

உண்மையின் வெளிச்சத்தில் நடந்து செல்பவனுக்குத் தெரிந்து விடுகிறது, கனவு காணும் ஒவ்வொருவனும் கடைசியில் விழித்துக் கொள்வான் என்று.

# 3

அறியாமை எனும் ஆழ்ந்த உறக்கத்திலிருந்து நம்மை யெல்லாம் விழித்திருக்க வைப்பது உண்மை.

தீவினையில் மூழ்கி மிக ஆழமான துயரத்தில் கிடப்ப வர்களை உண்மை அழைக்கிறது. அப்போது யார் அந்த அழைப்பிற்குச் செவி சாய்த்து விழித்தெழுகின்றனரோ,

அவர்களே அறிவாளிகளாகவும் போற்றுதற்கு உரியவர்களு மாகின்றனர்.

மனிதர்களுக்கு உண்மை, காட்சி தருகிறது. ஆனால் அதனை அவர்கள் கண்டு கொள்வதில்லை.

அது அவர்களை அழைக்கிறது; ஆனால் அதனைச் செவிமடுப்பதில்லை.

அவர்களின் செயல்பாடுகள் மூலம் அவர்களுடன் அது பேசுகிறது;

அவர்களின் துன்பங்களில் நின்று அவர்களுக்காகவே உரத்துக் கதறி அழுகிறது;

அவர்களின் எல்லா வழிகளிலுமிருந்து ஒளியை அது கொடுக்கிறது;

ஆனால் அவர்கள் கேட்பதோ காண்பதோ இல்லை.

ஏனெனில் அவர்களின் காதுகள் ஆழ்துயிலில் செவிடாகி விட்டன; அவர்களின் கண்களின் இமைகள் உறக்கத்தினால் இறுக்கியுள்ளன.

அறிவுள்ளவர்களின் செயல்களில் உண்மை வெளிப்படு கிறது;

அதன் ஒளி அவர்களின் நல் ஒழுக்க வாய்மொழி களுக்கு ஒளியையூட்டி மயககத்தை நீக்குகிறது.

ஆனால், தவறான உறக்கத்திலிருப்பவர்களுக்கு மெய்ம்மையை வெளிக்காட்டும் விழிகளில்லை.

உறக்கத்திலிருக்கும் அவர்களின் கண் மடல்களில் விழும் உண்மையின் வெளிச்சம் காண்பதற்கு உரிய வகையில் எதிரொளிப்பதில்லை.

புரிந்துகொள்ளும் தன்மை எங்கு இல்லையோ அங்கு வாய்மொழிகளைத் திரும்பத் திரும்பப் புகட்டினாலும் பயன் கிடைப்பதில்லை.

சரியானதைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் இன்றியமையாதது.

தீவினையற்ற மனம்தான் தெளிவான மனம்.

சரியாகப் பகுத்தறியும் ஆற்றல் எவனிடம் உள்ளதோ, அவனே களங்கமற்ற தன் செயல் வெளிச்சத்தினால் புனிதமான அறவுறைகளையும் கட்டளைகளையும் சரியாகவே வெளிப்படுத்துவான்.

தவறுகளைத் திரும்பவும் அவன் புரிவதில்லை, ஆனால் உண்மையின் உட்பொருளைப் புரிந்து கொள்கின்றான்—அதுவே உண்மையின் ஆற்றல் எழுச்சி.

தீவினைகளிலிருந்து விடுதலை பெறவேண்டுமானால் நல்ல செயல்கள் செய்வதையே உறுதியாக்கி, எல்லோருடனும் இணக்கத்துடன் வாழ வேண்டும்.

எவர்கள் தீங்கு இழைக்கிறார்களோ அவர்கள் உண்மையை அறியாதவர்கள்.

உண்மை அவர்களிடமிருந்து நன்மை புரிகிறது.

இரவில் இருளைப் போக்கி ஒளிதரும் விண்மீன்களைப் போல் உண்மையின் செயல்கள் ஒளிரும்.

என்றும் நிலைத்திருக்கும் நல்லதை வெளிப்படுத்துகிறது உண்மை.

இரவைப் பகலாகவும், எல்லாவற்றின் தோற்றங்களையும் மாற்றுவது உண்மையே; அதனால் தீவினையும் துயரமும் நீங்கித் தீமை என்றுமே நிகழாமல் போய் விடுகிறது.

# 4

நாம் விழித்தெழுந்து பார்க்கின்றோம்!

நாம் விழித்தெழுந்து விட்டோம் என்று நமக்குத் தெரிகிறது, ஏனெனில் நாம் நல்லனவற்றைக் காண்கிறோம்.

நல்லவற்றின் ஆற்றலில் நாம் உள்ளோம் என்பதை நாம் அறிகின்றோம், ஏனெனில் நம்மிடம் உள்ள பல வகையான தீய இச்சைகளும் நம்மைவிட்டு நீங்கியுள்ளன.

வேற்றுமையுடனான அடிமைத் தளை அறுந்துள்ளது.

நாம் தூய்மையுடன் இணைக்கப்பட்டுள்ளோம்;

நேர்மை எனும் உடையை அணிந்து கொண்டுள்ளோம்;

அன்பின் புனித ஆற்றலுக்கு நாம் பணிபுரிகின்றோம்;

அதனால், நாம் கண்விழித்துக் கொள்கின்றோம்;

தீமையிலிருந்து உண்மையே நம்மை விழித்து எழ வைத்தது என்பதை நாம் அறிந்து கொள்கின்றோம்.

நாம் ஒளியிலே நடமாடிக் கொண்டு இருப்பதனால் நாம் விடுதலை அடைந்து மகிழ்ச்சியுடன் உள்ளோம்.

அந்த ஒளியில் அனைத்தையும் மிகத் தெளிவாகவே காண்கிறோம்.

மேலும், எந்த வழியில் சென்று கொண்டிருக்கின்றோம், எங்குச் செல்கின்றோம் என்பதும் நமக்குப் புலனாகிறது.

ஆனால் நம் இச்சைகள் நம்மை அச்சுறுத்தியபோதும், பகை பலமாக நம்மைப் பற்றிப் பிணைத்துக் கொண்டாலும், இருள் நம்மைச் சூழ்ந்துகொண்ட போதும், தீய கனவுகள் நம்மைப் பற்றிக் கொண்ட போதும்,

நாம் கட்டுண்டு துயரத்திற்குள்ளாகின்றோம்;

அதற்கு ஏற்ற வகையில் மட்டும் உள்ள கனவுகளைக் கண்டோம்;

நாம் கடந்து சென்ற பாதையோ சென்ற இடமோ நமக்குத் தெரியாது.

எவன் மாந்தனை தீமையென வெறுக்கிறானோ அவன் தீவினைக்கு உள்ளாகிறான்.

தீவினைக்குள் இருக்கும் அவன் விழித்து எழுவதில்லை

விழித்திருப்பவனே எல்லா மனிதர்களையும் விரும்புபவன், அவனிடம் வெறுப்பில்லை.

அவனை வெறுப்பவர்கள்மேல் அன்பு வைத்திருப்பதே, உண்மையில் அவன் விழித்துக் கொண்டுள்ளான் என்பதற்கு அடையாளம்.

தீய கனவுகளுக்கு உண்மை முற்றுப் புள்ளியிடுகிறது;

அது வெறுப்பின் பொய்யான தோற்றங்களைக் கலைக்கிறது;

இருளிலிருந்தும் கனவுகளிலிருந்தும் தூங்குபவரை விடுவிப்பதும் அதுவே.

விழித்துக் கொள்ளுங்கள், ஆம்! அந்த உறக்கம் தவறானது!

நீங்களாகவே விழித்துக் கொள்ளுங்கள்! தீவினை தான் அந்தக் கனவு!

உயர்வான வாழ்வின் சிறப்பு உங்களைச் சுற்றியே உள்ளது, நல்லவரின் வாழ்வும்கூட.

கண்களைத் திறந்து பாருங்கள்.

எச்சரிக்கையுடன் இருந்து காதைக் கொடுத்துக் கேளுங்கள், உண்மையின் அழைப்பை உங்களால் கேட்க முடியும்.

விழித்தெழவைக்கும் பெருமை வாய்ந்த குரலைக்கூடக் கேட்கலாம்.

# ஆறுதல் அளிப்பவராக உண்மை

## 1

நிலையான ஆறுதலை அளிப்பது உண்மை பற்றிய அறிவே.

மற்றைய எல்லாமே தோல்வியுறும்போது, உண்மை தோல்வியடைவதில்லை.

எவ்வித உதவியுமின்றி நெஞ்சம் தனித்தே துன்பப் படும்போது உலகமே பாதுகாப்பு அளிக்க முன்வராத சூழ்நிலையில், உண்மையே அமைதியான புகலிடத்தையும் நிறைவான ஆறுதலையும் அளிக்கிறது.

வாழ்க்கையில் ஆதரவு கொள்வதற்கு எத்தனையோ உள்ளன;

அவற்றின் பாதையோ இடையூறுகள் பலவற்றி னால் சூழப்பட்டுள்ளது.

ஆனால் ஆதரவு அளிப்பவற்றைவிட உண்மையே பெருமை மிக்கது,

எல்லா இடையூறுகளையும் போக்குதற்கு முதன்மை பெற்றது.

நாம் தாங்க வேண்டிய சுமைகளைக் குறைக்கிறது, உண்மை;

நமது வழிப்பாதையைக் களிப்பின் ஒளிக்கதிர்களால் வெளிச்சமாக்குகிறது.

அன்பு செலுத்தப்பட்டவர்கள் இவ்வுலகை விட்டு மறை கின்றனர், நண்பர்கள் ஏமாற்றுகின்றனர்;

நாம் உரிமை கொண்டாடும் அனைத்துமே மறைந்து போகின்றன.

அப்போ, நமக்கு நலம் அளிக்கும் குரல் எங்கே உள்ளது?

ஆறுதல் பற்றிய கமுக்கப் பேச்சு எங்கே?

நல வாழ்வின்றி இருப்பவர்களுக்கு நல வாழ்வை அளிப்பதும், கைவிடப்பட்டவர்களுக்கு ஆதரவு அளிப்பதும் உண்மையே.

உண்மை நம்மைவிட்டு போய்விடுவதோ ஏமாற்றுவதோ அன்றி மறைவதோ இல்லை.

நிலையான சீர் அமைதிக்குத் தேற்றுதல் அளிப்பது உண்மையே.

இடர்கள் எல்லோருக்குமே நிகழ்பவை.

அவற்றிலிருந்து நல்ல அறிவாளிகளால்கூட தப்பிவிட முடியாது.

ஆனால், என்றும் நிலைத்திருக்கும் அந்த நல்லவரின் உறுதியானதும் பாதுகாப்பானதுமான புகலிடம் அறிவாளி களிடம் உண்டு.

அவர்களுக்கு நலம் அளிப்பவர் ஒருவர் உள்ளார்; உண்மையைவிட மிக உயர்வானவர்;

துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் கருவியை அகற்றி, இடர்கள் எனும் முகிற் கூட்டங்களைக் கலைந்து விடச் செய்கிறார்.

இருள் புன்மையானவர்கள்மேல் படிந்துகொள்வது போல் புனிதமானவர்கள் மேலும் படிகிறது;

ஆனால், புனிதமானவர்கள் அச்சப்படுவது இல்லை;

ஏனெனில் உண்மை உறுதி அளிக்கும் ஒளிச்சுடர் களினால் இருளைப் போக்கி வெளிச்சத்தைக் கொடுக் கிறது.

குற்றமற்றவர்களின் துயில் இனிமையானது.

அமைதியில் நம்பிக்கை கொண்டுள்ள உண்மையின் மேல் மட்டத்தில் அவர்கள் ஓய்வு கொள்கிறார்கள்.

அறிவாளிக்கும் அறிவிலிக்கும் உள்ள பாதைகளுக்குப் பகல் வெளிச்சம் அளிக்கிறது;

ஆனால் அறிவிலிகளோ தவறெனும் இருளினால் மூடப் படுகின்றனர்;

அவர்கள், தவறுகளினால் தடுக்கி விழுந்து காயமுறு கின்றனர்; அவர்களுக்கு ஆறுதல் அளிப்பவர் யாருமில்லை.

ஆனால், அறிவாளிகள் உண்மையின் வெளிச்சத்தில் நடந்து போகிறார்கள்.

அதனால், தடுக்கி விழும்போதெல்லாம் தூக்கி விடப் படுகிறார்கள்;

ஆம்! காயங்கள் ஆற்றப்பட்டு நலம் அடைகிறார்கள்.

உண்மை பற்றிய அறிவு பெற்றுள்ளவர்க்கு அமைதியில் நிறைவு ஏற்படுகிறது.

வாழ்க்கையில் ஏற்படும் இன்ப துன்பங்களினால் பாதிக்கப்படாதவர்கள் இல்லை;

உலக வாழ்வினால் ஏற்படும் கடமைகளின் பொறுப்பு களிலிருந்தும் பாதுகாப்பிலிருந்தும் அவர்கள் விடுவிக்கப் பட்டவர்கள் அல்லர்.

வெளியே உள்ள தீய பகைவர்களினால் தாக்கப்பட முடியாதவர்களும் அல்லர்;

ஆனால், அவர்களின் நெஞ்சத்தில் அமைதி நிலைக் கிறது;

அவர்களின் உள்ளங்கள் அமைதியை அளிக்கும் பெருமை வாய்ந்தவரைப் பின் தொடர்கின்றன.

# 2

இவ்வுலக வாழ்வின் நலன்களை நாடுபவர்களுக்கு நலன் அளிக்க யாருமில்லை.

ஆனால், அப்படி நலன்களை விட்டு அவர்கள் உண்மையின் உலகிற்கு விரைந்தார்களானால், ஆறுதல் எனும் இனிய பரிசைப் பெறுவார்கள்.

மகிழ்ச்சிக்கும் துன்பத்திற்கும் இடம் அளிப்பது இவ்வுலகம்.

மகிழ்ச்சியின் அமைதியின் உறைவிடம்தான் உண்மை.

எவர் உண்மைக்காக உலகிலுள்ள தங்களது தூண்டுதல்களையும் நிறைவின்மைகளையும் கைவிட்டு விடுகிறார்களோ அவர்கள், ஏமாற்றாத தோழனையும் துணைவனையும், என்றும் நிலைத்திருப்பவரையுமே கண்டு கொள்வார்கள்.

உலகத்தில் இன்னல்கள் உள்ளன.

அந்தோ, அல்லலும் அகவருத்தமும் நிறைந்துள்ளன.

ஆனால், உண்மை சலனமற்றது;

அது அல்லலைக் குறைத்து அக வருத்தங்களை அமைதிப்படுத்துகிறது.

உலகின் புலம்பல்களைக் கேளுங்கள்!

சூறைக் காற்றைவிட மிகவும் கொடுமையானது;

ஆழம் மிக்க ஆழியின் அலை ஓசையை விட ஆர்ப்புடையது.

உண்மை ஒன்று மட்டுமே பேராசையெனும் சூறைக் காற்றையும் துயரம் எனும் புயலையும் நிறுத்தி அமைதிப் படுத்த வல்லது.

ஆம்! அமைதிக்கு இறங்கி வாருங்கள்.

அமைதியே உருவான பெருமை மிக்கவரை நாடிச் செல்லுங்கள்.

அடக்க முடியாத ஆசைகளின் விரைவினால் மனிதர்கள் அடித்துச் செல்லப்படுகின்றனர்.

ஆனால், அல்லல் அவர்களைப் அகப்படுத்திக் கொள்ளும்போது அல்லலைத் தாங்க முடியாமல் அழு கிறார்கள்.

உலக இன்பங்களின் மேல் உள்ள ஆசை அவர்களைக் குறைவாகவே மதிப்பிட வைக்கிறது; மேலும் இந்த உலகினால் அவர்களுக்கு ஏந்தான வாழ்வை அளிக்க முடியா

உலகம் இன்னல் படுத்துகிறது; உண்மை அவர்களைத் தேற்றி ஆறுதல் அளிக்கிறது.

உலகம் எவரை நிலைகுலைய வைத்து கைவிட்டதோ;

எவரை . வேதனையாலும் அவலத்தாலும் எடுத் தெறிந்ததோ;

உண்மைக்குத் திரும்பிச் செல்லும்போது, அவர்கள்மேல் நட்புக் கொள்கிறது உண்மை.

உண்மையினால் எவரும் நிந்திக்கப்படுவதில்லை;

எவரும் ஏமாற்றப்பட்டுத் திருப்பி அனுப்பப்படுவது இல்லை;

எவருக்கும் நலவாழ்வு அளிக்காமல் விடுவதில்லை;

உங்களில் யார் இன்பம் தேடிச் செல்வதில் களைப்பு அடைகின்றீர்களோ;

யார் வேதனைப் பட்டுக் கொண்டு இருக்கிறீர்களோ;

யார் தனிமையிலிருந்து வீணாகிக் கொண்டிருக்கிறீர் களோ—

எல்லோரும் உண்மைக்கு வாருங்கள்!

உலக இன்ப துன்பங்களுக்கு மேலானது உண்மை.

வாழ்வில் உயர்வுறுங்கள்;

ஆறுதல் கொள்ளுங்கள்;

குணம் கொள்ளுங்கள்;

ஆதரிக்கப்பட்டு இன்னமைதி அடைவீர்கள்.

# 3

எவன் தன்னலப் பற்றுக்காகவும் தீவினைக்காகவும் ஏமாற்றங்களைப் பற்றிக் கொண்டு இருக்கிறானோ;

அவனால் உண்மையைக் கண்டுகொள்ள முடியாது.

உண்மையின் ஆறுதல்களை அவனால் பெற்றுக் கொள்ள முடியாது.

மேன்மை குறைவாக்கும், மாசுபடுத்தும் எல்லாமே விட்டொழிக்கப்பட வேண்டும்.

தன்னலத்தை ஒழிக்காது இருந்தால் உண்மையைக் காண முடியாது.

எவர் பொய் சொல்கிறாரோ ஏமாற்றுகிறாரோ;

எவர் வெறுக்கிறாரோ பொறாமைப்படுகிறாரோ;

எவர் இச்சை கொள்கிறாரோ பேராசைப்படுகிறாரோ;

எவர் தங்களின் இன்பத்தைப் பற்றியே சிந்தித்துக் கொள்கிறாரோ;

எவரின் குறிக்கோள் தனனலம் மிக்கதாகவும் அவர்கள் செய்யும் எல்லாவற்றிலும். தன்னலத்தின் புகமே உள்ளதோ; அவர்களுக்கு

இருளெனும் திரையினால் மறைக்கப்பட்டிருக்கும் உண்மையிலிருந்து, தவறெனும் வலுவான திரையிலிருந்தும் உண்மையின் ஆறுதல் தடுத்து நிறுத்தப்படுகிறது.

ஏனெனில், அவர்கள் தன்னலத்தை நாடிச் செல்கிறார்களே தவிர உண்மைக்காக இல்லை.

எவர் உண்மையாகவும் நேர்மையாகவும் இருக்கிறாரோ;

எவர் மனிதரை விரும்பி அவர்களின் வெற்றிகளினால் மகிழ்ச்சி அடைகின்றாரோ;

எவர் தூய்மையாகவும் தாராள மனம் உடையவராகவும் இருக்கின்றாரோ;

எவர் தாம் செய்யும் எல்லாவற்றிலும் மற்றவர்களின் நன்மையையும் கருதுகின்றாரோ;

அவர்களுக்கே உண்மை வெளிப்படுகிறது.

அவர்கள் நல்லவற்றுடன் நேருக்கு நேராக நின்று உண்மையின் ஆறுதல்களைப் பெறுகின்றனர்.

மூடர்கள், சிற்றின்ப உணர்வுகளினால் அடையும் நிறைவை நாடிச் செல்கின்றனர்.

உலகத்தின் புகழ்ச்சிகளில் வீணர்கள் மகிழ்ச்சி அடைகின்றனர்.

ஒருவன் துன்பத்திற்கும் வெறுமைக்கும் இழுத்துச் செல்லப்படுகின்றான்;

மற்றவன் ஏமாற்றத்திற்கும் மனத்தைப் புண்படுத்தவும் கூட்டிச் செல்லப்படுகிறான்.

அறிவுள்ளவனோ உண்மையின் களிப்பில் உறுதியாகவே நிற்கின்றான்.

பணிவானவர்களுக்கு எந்தவொரு படுகுழியும் எதிர்கொள்வதில்லை.

அமைதி நெறியில் அவர்கள் மிக விரைவாகவும் உறுதியுடனும் நடந்துசெல்கின்றனர்.

உலகத்துடன் நாம் கொண்டிருந்த வலுவான இணைப்பை நாங்கள் நீக்கி உள்ளோம்.

அதன் பலவகையான இன்பங்களும் ஒதுக்கி வைக்கப்பட்டு முற்றாகவே கைவிடப்பட்டுள்ளன.

உலகின் தேவைகளை நாம் செயற்படுத்திக் கொண்டு இருக்கின்றோம், ஆனால் அவற்றின் வடிவங்கள்மேல் நாம் இனிமேல் தங்கியிருப்பதில்லை.

பேராசைகளினால் பெறப்படும் நிறைவை நாடி இனிமேல் போவதில்லை.

எங்கள் நெஞ்சங்கள் எல்லோரின் நன்மையிலும் பதிந்துவிட்டது.

அவ்வாறே, சமயத்தினால் ஏற்படும் நிலையான இன்பத்தை நாம் கண்டு கொண்டோம்.

அமைதி அளிக்கும் நம்பிக்கையையும் ஆழ்ந்த மகிழ்ச்சியையும் அறிந்து கொண்டோம்.

பற்றார்வமுள்ள ஒருவரும், எங்கும் நிறைந்து எமக்கு ஏந்துகள் அளிப்பவருமானவரிடமே தஞ்சம் புகுந்து கொண்டுள்ளோம்;

அவரே புனித ஆன்மாவும்கூட.

அவரின் மிக உயர்வான இருப்பிடத்தில் நாம் தஞ்சம் அடைந்துள்ளோம்.

எவ்வித ஆசையாலும் தூண்டப்பட்டு, உலகின் கொந்தளிப்பான பாதைகளுக்கு மீண்டும் எங்களை இழுத்துச் செல்வதற்கு எவ்விதக் கவர்ச்சித் தூண்டுதலாலும் முடியாது;

ஏனெனில் எமது புகலிடமே உண்மையான பாதுகாப்பான புகலிடம்.

# 4

தன்னலப்பாதையே துன்பப் பாதையாகிறது; ஆனால் உண்மை, களைப்புற்று இருப்பவர்களின் களைப்பைப் போக்கிக் கொடுமைக்கு உள்ளவர்களை விடுவிக்கின்றது.

அங்கே, துன்புற்றவர்களுக்கு மகிழ்ச்சி கிடைக்கிறது.

உலகின் துன்பங்களினால் அவர்களுக்கு ஏற்பட்ட புண்களைக் குணப்படுத்தித் தடுக்கை அளிக்கப்படுகிறது;

விடுதலை பெறும் இடம் ஒன்று உள்ளது, அங்கே தீவினைச் சங்கிலிகள் அறுத்து எறியப்படுகின்றன;

அங்கே அழுகை இல்லை, அதனால் அழுகுரல்கள் கேட்பதில்லை.

நண்பர்கள் இல்லாதவர்களுக்கு ஒரு நண்பன் உண்டு,

ஆறுதல் அற்றவர்களுக்கு ஆறுதல் அளிக்கவல்ல ஒருவர் இருக்கின்றார்,

வாருங்கள்! வந்து பாருங்கள்; அவரை ஏற்றுக் கொள்ளுங்கள்.

உண்மை எல்லோரின் தேவைகளையும் எதிர் கொள்கிறது, எல்லோரையும் ஏற்றுக் கொள்ள அணியமாய் இருக்கிறது.

நேர்மையானவர்கள் அங்கே தங்கிவிடுகிறார்கள்;

மகிழ்ச்சியின் முழுமையை அவர்கள் பெற்றுக் கொள்கின்றனர்.

நேர்மை அறறவர்கள்கூட வரட்டும்.

ஆம்! தீவினைகளினால் களைப்படைந்து சோர்வுற்று இருப்பவர்களும் வரட்டும்;

மேலும், தன்னலத்தினால் ஏற்படும் துயரங்களைத் தாங்கி, அதனால் அல்லலுற்றவர்கள்கூடச் சேர்ந்து மகிழ்ச்சியை அடையட்டும்;

வீடு இல்லாதவர்களுக்கு ஒரு வீடும், நாடு கடத்தப்பட்டவர்களுக்கும் ஒரு நாடும உண்டு.

அலைந்து திரியும் நாடோடிகளுக்கு ஒரு வழியும், எதிரிகளுக்கு நகரமும் உண்டு.

தீய வழிகளிலிருந்து எவன் திரும்புகிறானோ, அவன் திரும்பி வரட்டும்.

மனக்குழப்பத்திலிருந்து அமைதியையும், துயரத்திலிருந்து மகிழ்ச்சியையும் அளிக்கின்றது உண்மை.

அது, தன்னலம் உள்ளவர்களை நல்லவர்களின் வழிக்கும், தீயவர்களைப் புனிதமானவர்களின் வழிக்கும் காட்டி விடுகின்றது.

அதன் எழுச்சியே நேர்மையானவர்களின் செயல்.

பணிவு உள்ளவர்க்கும் திறமை வாய்ந்தவர்க்கும் அமைதிப் பொன்முடியை அது சூட்டுகிறது.

ஆர்வம் உள்ளவர்க்கும் நன்றி உள்ளவர்க்கும் அது ஆறுதலை அளிக்கிறது.

நான், உண்மையிடம் புகலடைகிறேன்.

ஆம்! நல்லவர்களின் உணர்வில், நல்லவர்களின் அறிவாற்றலில், நல்லவர்களின் செயல்களில் நிலையாகவே நான் இருக்கின்றேன்;

அச்சம் அகற்றி ஆறுதல் கொண்டுள்ளேன்.

தீய எண்ணங்கள் இல்லாமையினால், பகைமை அற்று விட்டது.

தீயவற்றின் மேலான இச்சை, இருளின் அடியில சிறை வைக்கப்பட்டுள்ளது;

உண்மையின் தனிச்சிறப்பு எல்லாவற்றினும் மேன்மை பெற்ற வெளிச்சத்தில் செல்வதற்கு அந்த இச்சைக்கு வழியேயில்லை.

அதன் செருக்கு உடைந்து கரைகிறது.

தற்பெருமை உருகிப் பனிபோல் கலைந்தது.

நான், எனது முகத்தைச் சீர்மையான நல்லவனையே நோக்கியும், எனது பாதங்களை மாசு அற்ற வழியிலும் பதித்து உள்ளேன்;

இதனால் நான் தேற்றப்படுகிறேன்.

உண்மையிடம் புகலடைந்ததால் நான் பலம் மிக்கவனாகவும் ஆறுதல் கொண்டவனாகவும உள்ளேன.

## உண்மையே நம் மீட்பர்

# 1

உண்மையே எங்கள் மீட்பர்!

உண்மை எமது நெஞ்சத்தைத் தூய்மைப்படுத்தி புனிதமான அன்பின் புகழ்மிக்க பரிசினை எமக்குப் பாதுகாப்புடன் வழங்குகிறது.

தன்னலத்தினால் மீட்சியில்லை.

தன்னலம் தீவினைப் பாண்டம், படுத்துயரைப் பாதுகாக்கும் பெட்டகம்;

ஆனால், உண்மைக்கு நான் விரையும்போது தன்னலம் முடிவுற்று, அன்பு தன்னைப் பற்றி என்றும் நிலைத்து விடுகிறது.

தன்னலப் பாதைகளில் நின்று நாம் முயன்றோம், அதனால், அவை எவ்வளவு இடருடையன என்பதைத் தெரிந்து கொண்டோம்.

அவற்றால் சலிப்படைந்த எண்ணற்ற மக்கள் கூட்டத்தை நாமும் பார்க்கின்றோம், அதனால் பரிவு எங்களுடன் பங்கு கொண்டது.

ஆனால், இப்போது நாம் உண்மையைத் தெரிந்து கொண்டோம். அதனால் தன்னலப் பயணம் முடிந்தது.

நமது பாதங்களுக்கு ஆறுதல் கிடைத்துள்ளது, இனி மேல் உள்ளம் சலிப்பு அடையாது.

தன்னலத்தின் தன்மை, தவறு செய்தல், அதனால் பேரின்பத்தை அடையவே முடியாது.

தன்னலம் உள்ள பாண்டம் உடைந்ததும், அதில் நிறைந்திருந்த தவறுகளும் துன்பங்களும் சிதறுண்டு கிடக்கின்றன.

அப்போது உண்மை வெளிப்பட்டு அதன் தன்மை உணரப்படுகின்றது.

உண்மையால் மட்டும் தான் உண்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது; பேரின்பத்தால் மட்டுமே பேரின்பத்தைப் பற்றிக்கொள்ள முடியும்.

தன்னலத்தின் தன்மை தானே நிறைவு அடைதல், அப்போது, தன்னலத்தினால் அன்பை எப்படி அறிய முடியும்?

தன்னலத்தினால் அன்பை அளிக்கமுடியாது இருக்கும் போது, அதனால் எப்படி நட்புறவும் அமைதியையும் காண முடியும்?

அழிந்து போகும் ஆசைகள், வெற்று இன்பம் போன்ற வற்றின் இழப்புகள் பற்றி தன்னலம் அச்சமூட்டிக் கொண்டு இருக்கும்போது, எப்படிக் கடைத்தேற்றம் ஏற்றப்பட்டுப் பேரின்பத்திற்குள் புக முடியும்?

தன்னலமே இருண்ட வாழ்விற்கும் துன்பத்திற்கும் வழியாக அமைகின்றது.

மீட்கப்பட்டவர்கள் தன்னலத்தை தொலைவில் வீசி விட்டு உண்மையை ஏற்றுக் கொண்டவர்கள்.

மகிழ்ச்சியூட்டும்போது, தன்னலமானது தவற்றையும் உண்மையைப் போல் மதிப்பு அளிக்கிறது;

வெறுப்பு ஏற்படும்போது உண்மையைத் தவறு என மதிக்கிறது.

இன்பத்தைத் தேடுவதாலும், துன்பம் பற்றி அச்சம் அடைவதாலும் தன்னலத்திற்கு எது நல்லது? எது கெட்டது எனத் தெரிவதில்லை.

உண்மை ஒன்றினால் மட்டுமே உண்மையை உண்மையாகவும், தவற்றைத் தவறாகவும் அறிய முடிகிறது;

இன்பம், துன்பம்—இவற்றைப்பற்றிக் கருதாமலே அது தீமையை நீக்குகிறது.

இறை அன்பே உண்மையின் நிறைமலர்;

ஏனெனில், நெஞ்சத்தில் உண்மை நிரம்பும்போது, வாழ்வில் அன்பு மலர்ந்து மணம் பரப்புகிறது.

இந்த மலரினால் உண்மை அறியப்படுகிறது;

ஏனெனில், எங்கெல்லாம் நடுநிலை தவறாத அன்பு நிலவுகிறதோ, அங்கெல்லாம் உண்மையும் உள்ளது.

நேர்மையான செயல்கள், தூய்மையான செய்கைகள், தன்னலம் அற்ற தொழில்கள், கட்டுப்படுத்தப்பட்ட அமைதியான மனங்கள்—

இவையே உண்மையின் தேவ தூதர்கள்;

இவற்றைப் பெற்றுள்ளவர்கள்தான் மீட்கப்பட்டவர்கள்;

இவற்றின் உறைவிடமே அமைதி.

## 2

உண்மையே உலகின் பாதுகாவலர்.

இன்னொரு காப்பாளா உலகில் இல்லை.

உண்மையுடன் விட்டுக்கொடுத்துப் பேசுவதற்கு இடமே இல்லை;

"தன் நலத்தை விட்டு விடு" என்று அது கூறுகிறது.

நம்மிடமுள்ள அனைத்தையும் உண்மைக்கு உவந்து அளிக்கும்போதுதான், அது நமது மீட்பராகின்றது.

தன்னலம் காப்பாற்றப்பட முடியாதது;

அது விட்டொழிக்க வேண்டியது.

எந்த இருளில் அது உருவானதோ எதற்கு அது உரியதோ அதே இருளில் அதனை விட்டுவிட வேண்டும்.

எல்லாவிதமான தன்னலன்களையும் எவர் விட்டொழித்து முன்னேறிச் செல்கிறார்களோ அவர்களுக்கு மட்டுமே மீட்சிக்கான ஒளி காட்சி அளிக்கிறது.

எவர் திரும்பி வராமல் முன்னே சென்று மீட்பரின் முன்னிலைக்குள் நுழைகிறார்களோ, அவர்களே அந்த மீட்பரின் சீர்த்திமிக்க அங்கியை அணிகிறார்கள்.

மீட்கப்பட்டவரின் புகழை யாரால் அறிய முடியும்?

மீட்கப்பட்டவர்கள் அதைக் கவனித்துக் கொள்கிறார்கள்;

மீட்கப்படவுள்ளவர்கள் அதனை மங்கலாகவே காண்கிறார்கள்;

ஆனால் உலகின் கண்கள் தன்னலத்தின் நினைவுகளாலே கைக் கொள்ளப்படுகின்றன.

மீட்கப்பட்டவர்கள் எல்லோரும் மனிதர்களின் இடையில் அமைதியாகவே உள்ளனர்.

அவர்கள் யாரையும் குறை கூறுவதில்லை; கண்டிப்பதில்லை; திட்டுவதுமில்லை.

அடித்துத் துன்புறுத்தினாலும் சினப்படுவதில்லை.

இருந்தும், அடித்தவனைத் துன்பத்திலிருந்து உதவி புரிந்து காப்பாற்றி விடுகின்றனர்;

ஏளனம் செய்தவர்கள் வாழ்வில் தாழ்ந்த நிலைக்குச் செல்லும்போது;

மீட்கப்பட்டவர்கள் தூக்கி எடுத்து வாழ்த்தப்படுகின்றனர்.

உண்மையின் வாய் மொழிகளே செயல்கள்.

மீட்கப்பட்டவர்கள் எல்லாவகைத் தன்னலன்களிலிருந்தும் விடுதலை பெற்றவர்கள்;

உண்மையில் முழுமை பெற்றவர்களாக்கப்படுகிறார்கள்.

தன்னலம் பற்றிய எண்ணம் நீக்கப்படும்போது, தன்னலத்திற்கு ஊக்கம் அளிக்கக்கூடிய வேறெதுவும் அவர்களுடன் மிஞ்சி இருப்பதில்லை.

அமைதியுடனும், நேர்மையுடனும் அவர்கள் வாழ்ந்து எது சரியானதோ அதையே செய்வார்கள்; அவர்களின் செயல்பாடுகளிலிருந்து தீய ஆசைகள் ஒழிக்கப்பட்டு விடுகின்றன.

எவன், உண்மைக்கு அடிபணிகின்றானோ,

எவன், எண்ணத்தில் உறுதியுள்ள, கருத்து வலிமை யான, பற்றை உணரக்கூடிய உள்ளம் உள்ளதோ,

அவன் பாதுகாப்பு அளிக்கப்பட்டு உயர்த்தப்படுவான்.

அவன் புனிதத் தன்மையைக் கெடுக்கும் எல்லாவற்றை யும், துயரம் கொடுக்கக் கூடியவற்றையும் எதிர்த்து வெற்றி கொள்வான்.

உண்மையின் ஒளி, எல்லா வகையான இருளையும் போக்கி அவன் மனத்தில் வெளிச்சத்தைக் கொடுக்கும்;

அப்போது, எவர்க்கெல்லாம் இந்தப் புவியின் புகழ் தெளிவாகத் தெரிகின்றதோ அவர்கள் இடையில் அவன் எழுந்து நிற்பான்.

மீட்கப்பட்டவர்களுக்குத் தன்னலம் தங்கி நிற்கக் கூடிய குறுகிய இடம் தகர்க்கப்பட்டுத் துண்டு துண்டு களாக்கி வீசப்பட்டுள்ளது.

அப்போது, மனம் அழிவின்றி என்றும் நிலைத்திருப் பவர் பற்றிய உணர்வில் மூழ்கி விடுகிறது.

இந்தப் பேருலகின் உண்மை நிலையை அறிகின்றனர்;

ஆம்! அதன் திறமை மிக்க முழுமையும், அதனைக் கட்டுக்குள் வைத்திருக்கும் ஆற்றலின் சீரும் சிறப்பும் அவர் களுக்கு வெளிப்படுகிறது.

எனவே, உண்மையால் மீட்கப்பட்டவரின் வாழ்வு பரந்தது, எல்லை இல்லாதது, எல்லோராலும் பிணைக்கப் படுகிறது.

## 3

அழிவே இல்லாத உண்மை, அழியக்கூடிய தவறிலி ருந்து நம்மை மீட்கிறது.

அழிந்து போகக் கூடியவற்றில் இன்னமும் இறுகப் பிடித்துக் கொள்ளாமல், நாம் விரைவாகவே அழிவில்லாத தற்குச் சென்று,

பாதுகாப்பெனும் பெரும் பாறையைக் கண்டு கொள் வோம்.

உடல் வளர்ந்து முதுமை பெறுகிறது; ஆற்றல் இழந்து தளர்வடைந்து அழிந்து போகிறது;

பேராசைகள் எரிந்து போகின்றன, கழிவிரக்கத்தின் சாம்பல் மட்டுமே மிஞ்சுகிறது;

இன்பங்கள் நிறைவளிப்பதை நிறுத்திக் கொள்கின்றன; துன்பங்கள் அவற்றின் இடங்களை நிரப்புகின்றன;

ஆனால் உண்மை அழிவற்றது.

உண்மை எக்காலத்திலும் அதிர்ச்சி அடைவதோ சுருக்கு வதோ அழிந்து போவதோ இல்லை;

அது எரிந்து போவதுமில்லை, பின்னால் துயரமோ நோக்காட்டையோ விட்டுச் செல்வதில்லை.

அழியக் கூடியவற்றில் மனத்தைப் பதிய வைப்பவர்கள்;

கொடிய ஆசைகளினால் விழுங்கப்பட்டவர்கள்;

மகிழ்ச்சியற்றும் துன்பம் மிகுந்தும் வாழ்பவர்கள் மீட்கப்படமாட்டார்கள்.

மீட்கபபடுபவர்கள், அழிவற்றவை பற்றிய அறிவு பெற்றிருப்பதாலும் அவர்களிடம் நேர்மை இருப்பதாலும்,

மகிழ்ச்சியுடனும் களிப்புடனும் வாழ்கின்றனர்.

ஏனெனில், உண்மை எப்போதும் அழகும், ஒளியும் கொண்டுள்ளது.

ஆம்! உண்மை எப்போதும் அமைதி அளிக்கிறது;

வாழ்வில் ஏற்படும் போராட்டங்கள் என்னும் புயல்களை அமைதிப்படுத்துகிறது;

ஆசைகளினால் இழுத்துச் செல்லப்பட்டவர்களுக்கு அமைதியைக் கொடுக்கிறது;

மனத்துன்பம் எனும் இருள் நீரிலே, அமைதி எனும் எண்ணெயை ஊற்றுகிறது;

தொல்லைகளுக்குட்பட்ட மனம் மீண்டும் முன்னைய நிலைக்குத் திரும்பி அமைதியில் மூழ்கி விடுகிறது.

மீட்கப்பட்டவர்கள் நிறைவு அடைகிறார்கள்;

அவர்கள் பாதுகாப்பாகவும் அமைதியாகவும் உள்ளனர்;

தீய கவர்ச்சிப் புயல்களினால் அவர்கள் அடித்துச் செல்லவோ தோற்கடிக்கவோ படமாட்டார்கள்;

கொடிய பேராசைகளினால் தாக்குண்டு கீழே மிதிபட மாட்டார்கள்;

இவற்றிற்குக் காரணம்— அவர்கள் பாதுகாப்பான இடத்தில் வாழ்கிறார்கள்.

மீட்கப்பட்டவர்களை எந்த எதிரி வெற்றி கொளள முடியும்?

முதன்மையான எதிரி, தன்னலத்தைக் கூட அவர்கள் வெட்டி வீழ்த்தவில்லையா?

ஆண்டவனின் கோட்டையான அவர்களின் நெஞ்சத்தைக் கூட அவர்கள தங்களுக்கே உரியதாக்கிக் கொள்ளவில்லையா!

ஆம்! அவர்கள் தங்கள் உள்ளத்தைத் தூய்மையாக்கி விட்டார்கள், அதனால் தூய்மையற்றவர்கள் தூயவர்களை வெற்றி பெற முடியாது.

அந்தக் கரிய இரவிலிருந்து!

கொடிய போரிலிருந்து;

குழப்பத்திலிருந்தும், முரண்பாடுகளிலிருந்தும் மீட்கப் பட்டவர்கள் வந்துள்ளனர்;

அவர்கள் இப்போது பேரொளியில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்;

அவர்கள் அமைதியுடனும், உறுதியுடனும் நிற்பதனால் இருளும் இடர்களும் இனிமேல் அவர்களுக்கு இல்லை.

# 4

மீட்கப்படாதவர்கள் தன்னலத்தின் எல்லைகளுக்கு உள்ளேயே தங்குகிறார்கள்;

இருளினால் அவர்கள் கட்டுப்பட்டுள்ளனர்;

அவர்கள் நாடுவது தன்னலத்தை மட்டுமே.

இந்தப் புவியில் யாருக்கும் தெரியாத உருவம் அற்றவரின் மேன்மையிலே மீட்கப்பட்டவர்கள் உள்ளனர்;

அவர்கள் ஒளியினால் வளைக்கப்பட்டுள்ளனர்;

அவர்கள் நாடுவது எல்லோரின் நலனே.

பிணைப்புகளை உடைத்து எறிய வல்லது உண்மை;

அது அடிமைகளுக்கு விடுதலையை வழங்குகிறது;

அவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்கிறது.

விடுதலையை விட்டு அடிமைத்தளையை யார் தெரிந்து எடுப்பார்கள்!

ஒளிக்கு மாற்றாக இருளை யார் விரும்புவார்கள்!

விடுதலை பற்றி அறிந்திராதவனே தான் கட்டுண்டு கிடக்கும் விலங்கை விரும்புவான்;

எவன் ஒளியைக் காணாமல் இருக்கிறானோ அவன் மீண்டும் இருளிலே கிடக்க விரும்புவான்.

விடுதலை பற்றி அறிந்ததும, அது அவனால் விரும்பப் படும்.

அந்த ஒளியைக் கண்டு உணரும்போது, அதன் பின்னர், இருளிலே வாழ இடம் இருக்காது.

தசையின் மேலுள்ள இச்சைகள், தொல்லைப் படுத்தும் காய்ச்சல் போன்றது;

மனத்தில் ஏறபடும் வெறுபபுகள், போராட்டங்கள்— அனைத்தும் பொசுக்கும் தீ:

ஆனால் அந்தக் காய்ச்சலுக்கு மருந்தும் தீயின் வேட்கையைத் தீர்ப்பதற்கு நீரும் உள்ளன.

உண்மையே மனத்திற்கு நலம் அளிக்கும் மருந்து;

துன்புற்றவர்களுக்கு அதுவே இன் மருந்து;

வேட்கையினால் அவதிப்படுபவர்களுக்கு அதுவே ஒரு மடக்கு குளிர்ந்த நீர்.

உண்மையில் ஆறுதல் இன்மைக்கு இடமில்லை.

மீட்கப்படாதவர்கள் துஃப வழியில் உள்ளனர்;

வேதனையும் களைப்புமே அவர்களின் கூட்டாளிகள்.

இன்பங்களை அடைந்த பின்னர் துன்பங்களைப் பற்றிக் கொள்கின்றனர்;

தன்னலத்திற்காக ஆவலுடன் பாடுபடும்போது, மகிழ்ச்சி அவர்களைவிட்டு மறைகிறது.

ஆனால், மீட்கப்பட்டவர்கள் எப்பொழுதும் மகிழ்ச்சிப் பாதையிலே போய்க் கொண்டிருப்பார்கள்;

பலமும் மகிழ்ச்சியும் அவர்களின் நண்பர்கள்;

நல்லவர்களிடமிருந்து பிரிந்து செல்லாமல் அவர்கள் எப்போதும் மகிழ்ச்சியின் இல்லத்திலேயே வாழ்கின்றனர்.

அப்படியானால், எவற்றிலிருந்து நாம் காப்பாற்றப் பட்டுள்ளோம்?

எதிலிருந்து நாம் காப்பாற்றப்பட்டோம், எங்கே உள்ளது எங்கள் பாதுகாப்பு என்னும் பேரின்ப வீடு?

நாங்கள், தன்னலத்திலிருந்தும் இச்சைகளிலிருந்தும் காக்கப்பட்டுள்ளோம்,

தீவினையிலிருந்தும் துன்பத்திலிருந்தும்,

பழிகேடான நிலையிலிருந்தும் ஆறுதல் இன்மையிலிருந்தும்,—

நாம் மீட்கப்பட்டுள்ளோம்.

பேராசையிலிருந்தும் வெறுப்பிலிருந்தும் காப்பாற்றப் பட்டுள்ளோம்,

செருக்கிலிருந்தும் பகட்டிலிருந்தும்,

பேராசையிலிருந்தும் பொறாமையிலிருந்தும் இழுத்து வரப்பட்டோம்.

உண்மையின் பயிற்சியினால்,

உண்மை பற்றிய அறிவினால்,

உண்மையின் ஆற்றலினால் நாம் காப்பாற்றப்பட்டு உள்ளோம்.

உண்மையினாலேயே எங்கள் பேரின்ப வீட்டை அடைய முடிந்தது.

நாங்கள் உண்மையில் ஆறுதல் அடைகின்றோம்.

உண்மையே உலகின் மீட்பர்.

## உண்மை - நட்புறவாளர்

### 1

தீவிரவாத போக்கு உடையவர்களைச் சரிசெய்வது உண்மை.

உண்மை—

எதிர் எதிரே நிற்பவர்களைச் சமநிலைக்குக் கொண்டு வருகின்றது;

எல்லா வேறுபாடுகளையும் எதிரானவற்றையும் அது ஒருங்கிணைக்கின்றது.

நாம் தவறு இழைத்தபோது, எல்லாமே தவறுதல்களாகத் தெரிந்தன;

ஆம்! நம் தவறுகள் நமக்குத் தெரியாதிருந்தபோது, எல்லாவற்றிலும் தவறுகள் கண்டோம்;

நன்மையைத் தீமையாகவும் தீமையை நன்மையாகவும் கருதினோம்;

அதேபோல் ஒளியை இருளாகவும் இருளை ஒளியாகவும் கண்டோம்.

ஆனால் இப்போது, எம்மிடமிருந்த தவறு காணும் கண்களைப் பறித்து விட்டோம், அதனால் நாம் எல்லோருக்கும் மேலே உள்ளதும் வல்லமை நல்லதைக் காண்கிறோம்.

மனிதனுக்கு மனிதன் கொண்டுள்ள பகையை நீக்கி ஒற்றுமையாக்குவது உண்மை;

அது, மனிதனைப் பேருலகுடன் ஒற்றுமைப் படுத்துகிறது;

நல்லறம் பற்றிய அறிவை அவனுக்கு அளிக்கிறது;

மறைந்திருக்கும் அறமுறையை எல்லா நிகழ்வுகள் மூலமும் வெளிக்கொணர்கிறது.

ஓய்வின்மை, சீற்றம், குழப்பம்—இவற்றை உண்டாக்குவதெல்லாம் குற்றத்தில் உறைந்துள்ளன.

நேர்மையின்மை, குழப்பம், கருத்து வேறுபடும் தன்மைகளை உடையவன் எப்போதும் இடர்பாடுகளாலும் கலக்கத்தினாலும் பாதிக்கப்படுவான்.

ஆனால், எவன் அறத்தையும் முறைமையையும் ஒழுங்கையும் கொண்டுள்ளானோ அவன் அமைதியில் நிறைவுறுவான்

தவறு தவறுறையே காண்கிறது, உண்மை உண்மையையே காண்கிறது.

தவறு இருளாக இருப்பதனால், ஒளியை ஊடுருவிப் பாய, அதனால் முடியாது;

ஆனால், உண்மை ஒளியுள்ளதாக இருப்பதால், இருளை ஊடுருவிச் செல்ல அதனால முடிகிறது.

ஒளி இருளை, உண்மையுடன் இணங்க வைக்கிறது.

தவறுகளோ ஆறுதல் இன்மையை அதிக அளவில் உண்டாக்குறது;

உண்மையே மாண்புமிக்க நட்பமைதி;

தவற்றின் கண்களைக் கொண்டு பார்ப்பவன், கொடும் புயல் காற்றைப்போல் அமைதி அற்றவனாகிறான்.

ஆனால், உண்மையின் கண்களால் பார்ப்பவன் அசையாத மலைபோன்ற ஆறுதலை அடைகின்றான்.

நாம் உலகுடன் நட்புறவு செய்யப்பட்டுளளோம்;

மனிதத் தன்மையுடன் நட்புறவு செய்து வைக்கப்படுகின்றோம்;

அப்படி நட்புறவு செய்யப்பட்டதும் நாம் ஆறுதல் அடைகின்றோம்.

எங்கே ஆறுதலின்மை உள்ளதோ, அங்கேநட்புறவுக்கு இடமே இல்லை;

எவர், அப்படி செய்யப்படாமல் இருக்கிறார்களோ அவர்கள் உண்மையைப் பெறாதவர்களாகிறார்கள்.

## 2

உலகிலுள்ள அனைத்துமே சரிசம அளவில் அமைந்துள்ளன!

எல்லாச் சூழ்நிலைகளும் முறையானவை;

எல்லா நிகழ்வுகளும் காரணங்களுடனே நிகழ்கின்றன.

எவனுக்கு உண்மையின் ஒளி கிடைக்கிறதோ அவன் எல்லாவற்றையும், அவற்றின் சரியான தொடர்புகளுடன் காண்கின்றான்.

எல்லாமே காரணத்தின் அடிப்படையில் நிகழ்கின்றன; அதனால் ஆட்சி கொள்ளப்படுகின்றன;

எல்லாமே ஒரு விளைவை உண்டாக்கும் தன்மை கொண்டன.

காரணத்திற்கும் விளைவுக்கும் உள்ளே அடங்காதது எதுவுமில்லை.

காரணமும் விளைவும் ஒன்றே!

தெய்வீக அறமுறைக் கட்டளை ஒன்றே.

பெரும் குழப்பத்திலிருந்து இந்தப் புவிக்கு வந்துள்ளோம்;

தடுமாற்றத்திலிருந்து ஒற்றுமைக்கும், அச்சத்திலிருந்து நிலைத்த அமைதிக்கும் வந்துள்ளோம்.

எல்லாவற்றிலும் நன்மை உண்டு.

தீமையிலிருந்து கிடைப்பது துன்பம்;

துன்பத்திலிருந்து கிடைப்பது துயரம்;

துயரத்திலிருந்து மெல்ல மெல்ல பிறக்கிறது அறிவு.

இரவு நீண்டதாக இருந்தாலும் காலை வேளை வரத் தவறுவதில்லை!

அதனுடன் செங்கதிர் ஒளியும் பாடல்களும் சேர்ந்து வருகின்றன.

நீண்ட இரவில் உலகம் மூழ்கியிருந்தாலும், பெருமை மிக்க விடியல் வரும்.

ஓ! அந்த ஒளியின் பிழம்பை நாம் உற்றுப் பார்க்கின்றோம்!

இனிமேல் எங்களுக்குப் பகைவர்களே இல்லை.

எல்லோருமே எங்களுக்கு அன்பானவர்கள்.

புனிதமானவர்களும் வசைமொழி பேசுபவர்களும் எமக்கு நண்பர்களே.

உள்ளேயுள்ள நம் பகைவன் தோற்கடிக்கப்பட்டதும் வெளியே இருந்த பகைவர்கள் எல்லோரும் ஓடி மறைந்து விட்டனர்.

இனிமேல் பகைமை இல்லை.

மனிதர்களும் உரிய பொருள்களும் இடங்களில் உள்ளனர்; உள்ளன.

இனிமேல் கலகம் இல்லை. சண்டை இல்லை; போர் இல்லை.

சச்சரவை நாம் உற்று நோக்குகின்றோம், ஆனால் அதில் ஈடுபடுவது இல்லை;

குழப்பத்தின் ஒலியைக் கேட்கின்றோம், இருந்தும் நாம் எவ்வித முழக்கமும் இடுவதில்லை.

ஆனால், ஓசைப்படாமல் நின்று நாம் அதைப் பார்க்கிறோம்.

பேசாமல் இருந்தாலும் நாம் புறக்கணிப்பதில்லை.

தெய்வீகக் கட்டளையை உணரும்போது, எல்லாவற்றுடனும் நாம் இணக்கமாகின்றோம்; அவ்வாறு இணக்கமானதும், நாம் நிறைவான அமைதியில் உள்ளோம்.

## 3

ஆகவே, நாம் துன்பப்பட்டுப் புலம்பி அழவேண்டுமா?

அவ்வாறு புலம்பி அழுவதற்குற்ற காரணம்தான் கரைந்து போய்விட்டதே;

துயரத்தின் அடித்தளம் வெட்டி வீசப்பட்டது.

தீவினையும் தீமையும் முன்னர் இருந்தன, ஆனால் இப்போது அவை இல்லை.

கருத்து மாறுபாடுகள் தகர்க்கப்பட்டுள்ளன.

எதைப்பற்றி நாம் நிறைவு அடைவது?

பிளவுபட்ட உலகம் அழிக்கப்பட்டது.

நாம் எதிர்ப்பதற்கு என்ன உள்ளது?

நாங்கள் வழக்காடுவதும், ஆவலாகவும் அக்கறையாகவுள்ளதுமான உண்மை தோல்வி அடையுமா?

உண்மைக்கு எப்போதும் பொறுத்துக் கொள்ளும் தன்மை இருப்பதனால் நம் அமைதி ஒருபோதும் தோல்வி அடையாது.

விதை, அதற்குரிய இடத்திலிருந்து தவறிப் போகிறது.

மலர்கள் தோன்றுகின்றன, பழமும் அதன் பருவ காலத்தில் பழுக்கிறது.

பகல் சூடாக்குகிறது, இரவு குளிராக்குகிறது;

ஒளி எங்கும் பரவுகிறது, மழை பெய்கிறது;

பனி மூடுகிறது, உறைபனி எல்லாவற்றையும் பிடித்துக் கொள்கிறது.

இவை எல்லாம் எதிர்க்கப்படுகின்றனவா?

இவை எல்லாம் பகைவர்களா?

அவை யாவும் ஒன்றாய்ச் செயல்படுகின்றன.

அப்படியானால் நம்மைக் கடுஞ்சினத்திற்குத் தூண்டுவது யார்?

சுருக்குபவர்களின் பட்டியலில் எங்களை இணைத்துக் கொள்வது யார்?

நாம் நட்புறவுடன் உள்ளோம் என்பதை எங்களுடன் ஒத்துக் கொள்பவர்கள் யார்?

எங்களை எதிர்ப்பவர்களுடன் நாம் நட்புறவுடன் உள்ளோம்.

நண்பர்கள் அண்மையிலோ பகைவர்கள் தொலை விலோ இல்லை;

புகழ்ச்சியும் குற்றச்சாட்டுகளும் வெவ்வேறாக இல்லை

உண்மை எல்லாவற்றையும் ஒன்று கூட்டுகிறது.

அது, எல்லா எதிரிகளையும் ஒன்றாக்குகிறது.

ஆம்! கூறுபட்டிருந்த ஆற்றல்கள் இப்போது ஒன்றாகச் சேர்ந்துள்ளன.

போட்டியிட்டுக் கொண்டிருந்தவை அனைத்தும் இப் போது இணக்கத்தில் உள்ளன.

எதிராகக் காணப்பட்ட நிகழ்வுகளெல்லாம் இப்போது இணக்கமாகவே உள்ளன.

நாம் அச்சப்பட்டது எவ்வளவு மடமை?

எங்கள் மூட வெறிமையில் எவ்வளவு குருட்டுத்தனமாக இருந்தோம்!

நமது நெஞ்சத்தில் எவ்வளவு வெறுப்பு ஊட்டப் பட்டது!

சீறிக் கொல்லும் விலங்குகளைப் போலிருந்தோம்.

அல்லது, குருட்டு விட்டில் பூச்சி அடிபட்டு இறப்பதைப் போல்!

எல்லாமே ஒத்திருக்கின்றன.

அதனால் அச்சம், அறியாமை, வெறுப்பு—இவற்றிற்கு இனி இடமே இல்லை.

மிகக் குறைவான நிலையிலிருந்து விடுபட்டு மிகப் பெருமை வாய்ந்த உயர்நிலை வெளிப்படுத்தப்படுகிறது.

பகுதியை ஒதுக்கித் தள்ளிவிட்டு முழுமையே பெறப் பட்டது.

நிறைவில்லாததைத் தவிர்க்கும்போது, மிஞ்சியிருப்பது முழுமையே!

# 4

மெய்யாக எல்லாவற்றிற்கும் இணக்கம் ஏற்படும்போது அமைதி காத்திருக்கிறது.

உண்மையின் கதவு திறந்திருக்கிறது.

தடை செய்ய யாருமில்லை, ஆனால் மனிதன் பின்னே நின்று அதைத் திறக்க விடாமல் பிடித்துக் கொண்டு நிற்கிறான்.

அப்படி அவன் பிடித்துக் கொள்வது சில காலத்திற்கே.

ஆனால், பயன் பெறும் காலம் வரும்போது அவன் முன்னே வருகின்றான்.

யார் முன்னால் வருகின்றானோ அவன் வரட்டும்!

அவன் வந்து சேர்ந்து மகிழட்டும்.

எல்லாமே இருப்பது இப்பொழுதுதான்.

எல்லா வெளிச்சம், எல்லா அறமுறைக் கட்டளைகள், எல்லா உண்மைகளும் இப்போதே.

காலமும் என்றும் நிலைக்கும் தன்மையும் ஒன்று?

பொருளும் ஆற்றலும் உண்டு;

இறப்பும் பிறப்பும் ஒன்று;

குருடர்களுக்கு இது புலப்படுவதில்லை.

ஆனால், கண்களை உடையவர்கள் தாங்கள் காண்பவற்றை அறிந்து கொள்கிறார்கள்.

நாம் முயற்சி எடுப்பதில்லை.

நாம் தொலைவில் நின்று பேச்சற்றிருக்கிறோம்.

சில நேரங்களில் மட்டும் மனிதர்கள் அங்கும் இங்குமாகப் பரபரப்பில் அலைகின்றனர்.

சற்று நேரத்திற்கு மட்டும் வருவார்கள், அப்படியே சற்று நேரத்தில் போய் விடுகின்றனர்.

எவ்வளவு அவாவுடையவர்கள்!

எவ்வளவு பற்றார்வம் உடையவர்கள்!

எவ்வளவு கொடியவர்கள்!

உலக ஆதாயங்கள் எல்லாவற்றையும் விடச் சிறந்தது அமைதிக்கான உந்துதலே.

ஆட்சியையும் செல்வங்களையும்விட உண்மையுடன் உறவை ஏற்படுத்திக் கொள்வதே மேன்மை மிக்கது.

தீத்தழல் அவிந்து போகிறது, புயல் அமைதி அடைகிறது;

ஆனால் இன்னமைதி மிஞ்சிவிடுகிறது.

அமைதி பக்குவமாகப் பாதுகாத்து மீண்டும் நிலை பெறச் செய்கிறது.

விறமைதியே மிகப் பெருமை வாய்ந்த உடமை.

நமது தனித்த நிலையை யார் பழிப்பது?

அமைதி, ஆற்றல் மிக்கவனைத் தழுவிக்கொள்கிறது.

நமது நட்புறவு அவனையும் இணைக்கிறது.

இடைவெளி இருந்தும் நாம் வேறானவர்களல்லர்.

தனித்திருந்தாலும், நாம் பிரிக்கப்பட்டவர்கள் அல்லர்.

எவருடனும் தொடர்பு இல்லாமலும் எவருடனும சேர்ந்திருக்காமலும் உள்ளோம்.

இருந்தும்கூட, எல்லோருக்கும் நாம் உரியவர்களே.

ஒன்னனில் முழுமைபெற்ற நட்புறவு பாகுபாடு அற்றது, முறையானது.

எவன் எல்லாத் திசைகளையும் பார்க்கிறானோ அவனே முழுமையைக் காண்கிறான்;

முழுமையை அவன் காணும்போது, நிறைவு அடைகிறான்;

நிறைவு அடைந்ததும், எல்லோருடனும் அன்புறவுடன் இருக்கின்றான்.

பெருமை மிக்க புகழைக் காண்பவர்கள்,

விண்ணுலகின் அமைதியான இசையைக் கேட்பவர்கள், அவர்களே முழுமையான அறமுறைக் கட்டளைகளை அறிந்து கொண்டவர்கள்.

மிகப் பெருமை வாய்ந்தது உமது மகிழ்ச்சி!

வியப்படைய வைப்பது உமது அறிவு!

ஆழமானது உமது நட்புறவு!

உமது ஒருநாள் அமைதி, ஒலிமிக்க ஆயிரம் ஆண்டுகளை விட அதிக ஆற்றல் வாய்ந்தது.

எல்லாக் கட்சிகள், எல்லாத் திசைகள், எல்லாச் சமயங்கள்,— எல்லாமே ஒற்றுமையானவை.

அன்பு, எல்லோரையும் ஆதரிக்கிறது,

விழ்ந்து போகாதவாறு எல்லோரையும் தாங்கி நிற்கிறது,

எல்லோரையும் உணவூட்டி வளர்க்கிறது.

ஒற்றுமை ஏற்படுத்தும் பெருமை மிக்கவர் வந்து விட்டார்;

அவர் இங்கேயே இருக்கின்றார், நாம் அவரைக் கண்டு கொண்டோம்.

அவரைத் தேடிச் சென்றோம், அவர் நம்மைத் திருப்பி அனுப்பவில்லை.

அதனால், நாம் உலகை அடைந்து விட்டோம்;

அமைதி நம்மை விட்டுவிட்டுச் செல்லாது.

# உண்மை-எங்கள் பாதுகாவலன்

# 1

நற்செயல்கள் எல்லாமே உண்மையானவை.

நாம் செய்யும் நற்செயல்கள் நம்முடனேயே தங்கி நிற்கின்றன, அவை நம்மைப் பாதுகாத்து ஆதரிக்கின்றன.

தீச்செயல்கள் தவறானவை.

தீச்செயல்கள் நம்மைப் பின் தொடர்கின்றன, தீச்செயல்களைச் செய்யத் தூண்டப்படும் வேளை, அவை எங்களைத் தூக்கி எறிகின்றன.

தீச்செயல் புரிபவர்கள், கவலையிலிருந்து காத்துக் கொள்ளப்படுவதில்லை;

ஆனால் நன்மை புரிபவனோ, எல்லாக் கெடுதல்களிலிருந்தும் காப்பாற்றப்படுகின்றான்.

மூடன் தனது தீய செயலிடம், "வெளியில் தெரியாதவாறு மறைவாகத் தங்கிவிடு" எனக் கூறுகிறான்.

ஆனால், அவனின் தீமை முன்னரே எங்கும் தெரிந்து விட்டது,

அதனால் அவனுக்குத் துயரம் உறுதியானது.

நாம் தீமையில் உள்ளோமானால், நம்மை எதுதான் காப்பாற்ற உள்ளதோ?

துன்பத்திலிருந்தும் குழப்பத்திலிருந்தும் நம்மை விடுவிப்பது யாது?

மனிதனோ, மங்கையோ, செல்வமோ, அதிகாரமோ, விண் உலகமோ, மண்ணுலகோ—எதுவுமே குழப்பத்தில் இருந்து நம்மை விடுவிக்காது.

தீமையின் முடிவுகளிலிருந்து தப்பிவிட முடியாது; புகலிடமில்லை, பாதுகாப்பும் இல்லை.

நல்லவர்களாக இருந்தால், எம்மைத் தூக்கி எறிய என்ன இருக்கிறது?

துன்பத்திற்கும் குழப்பத்திற்கும் எம்மை ஆளாக்குவது எது?

மனிதனோ, மங்கையோ, வறுமையோ, நோயோ, விண்ணுலகோ, மண்ணுலகோ—எதுவும் நம்மை குழப்பத்திற்குள்ளாக்காது.

காரணம் தான் மறக்கப்பட்டாலும், நல்லவற்றின் விளைவுகள் தோற்றம் அளிக்கும்,

அதன் புகலிடமும் பாதுகாப்பும் கையிலே உள்ளன.

தாயத்துகளும் மந்திரங்களும் என்ன பயனை அளிக்க உள்ளன?

ஒழுங்கு செய்யப்பட்ட வழிபாடுகளின் முணுமுணுப்புத் தான் பயனை அளிக்குமா?

பொதுவான சடங்குகளைக் கடைப்பிடித்தால்தான் பயனை அளிக்குமா?

இவற்றால் பயனை அளிக்க முடியாது, இவை வெறுமையானவை.

இவை ஆற்றலற்றவை, பாதுகாப்பதற்கு முடியாதவை.

நேர்மையே பயனளிக்கிறது.

நல்ல செயல் புரிவது பயனை அளிக்கும்.

தூய்மையான உள்ளமும் குற்றமற்ற வாழ்வும் பயனளிக்கும்.

அவை மகிழ்ச்சியாலும் நட்புறவினாலும் நிரப்பப் பட்டவை.

உண்மை மகிழ்ச்சியின் இருப்பிடம், நிலையான பாது காப்பு அளிப்பது.

உண்மையில் இதற்குமேல் ஐயமும் உறுதியின்மையும் இல்லை.

அங்கு இடரற்ற பாதுகாப்பு உள்ளது;

அங்கு நேரான பாதையும் அமைதியான ஆறுதலும் உண்டு.

## 2

நேர்மையானவர்கள், உண்மையின் பாதுகாப்பை அறிந்து கொள்வார்கள்.

அவர்களின் மனங்கள் விடுதலை பெற்றவை, நெஞ் சங்கள் மகிழ்ச்சி நிறைந்தவை.

வீணான மன்னிப்புகளுக்கும் புரட்டுப் பேச்சுகளுக்கும் அவர்கள் இடம் அளிப்பதில்லை.

தங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது என்று அவர்கள் திட்டமிடுவதில்லை;

அவர்களின் செயல்களே வெல்ல முடியாத காவ லர்கள்;

அவர்களின் வாழ்வே சான்று, அதனால் அவர்கள் வெட்கப்படுவதில்லை.

நேர்மை அற்றவர்களோ, வெட்கத்தாலும் குழப்பத் தாலும் தோற்கடிக்கப்படுகின்றனர்.

அவர்கள் அதனை மறைக்க முயல்கிறார்கள், ஆனால் அவர்களால் முடியாது;

அவர்களிடம், மறைத்து வைப்பதற்கான இடமில்லை;

அவர்களின் செயல்களே அவர்களைக் குற்றம் சாட்டு கின்றன, அதனால் அவர்களுக்குப் பாதுகாப்பு இல்லை.

நேர்மையானவர்கள் அடடா, எவ்வளவு மகிழ்ச்சியாக வுள்ளனர்!

எல்லா ஆவல்களிலிருந்தும் விடுபட்டுள்ளனர்.

உண்மையுடன் செயல்படும்போது, அவர்கள் முழுமை யான உரிமையுடன் செயல்படுகின்றனர்.

நேர்மை மிக்கவர்கள் எவ்வித அச்சமும் இன்றி இருப்ப வர்கள்!

அவர்களிடம் இருள்படிந்த கெட்ட பண்புகள் இல்லை;

அவர்கள் எந்தத் தீமைக்குமே அஞ்சுவது கிடையாது

தீங்குகள் அவர்களை அச்சுறுத்தும்போது, அவர்கள் எவ்விதக் கலக்கமுமின்றி இருப்பார்கள், அச்சப்படுவதும் இல்லை.

மனத்தினால் ஏற்படக்கூடிய துன்பங்களிலிருந்து காப் பாற்றுவதற்கு உண்மை ஒரு பாதுகாப்புக் கருவி.

பெரும் துயருக்கு எதிர் அரணாக அமைகிறது;

அது, தன்னலம் என்னும் மருட்கையையும் துயரத்தை யும் அழிக்கிறது;

குற்றங்களையும் அவற்றிற்கான காரணங்களையும் உண்மையின் ஒளி வெளிப்படுத்துகிறது;

அது, அவற்றினால் ஏற்படும் விளைவுகளையும் வெளிப் படுத்துகின்றது;

தீமைக்கான சூழ்நிலைகள் எல்லாவற்றையும் மனத் திலிருந்து நீக்குகின்றது

நேர்மையினால் நிலை நிறுத்தப்படுபவன் பாதுகாப் பினாலும் நிலை நிறுத்தப்படுகிறான்.

தவற்றிலிருந்து உண்மையோ, உண்மையிலிருந்து தவறோ தொடர முடியாது.

தீமையின் விளைவு நன்மையாகவோ நன்மையின் விளைவு தீமையாகவோ இருக்க முடியாது.

அதற்குச் சிறிதளவும் விளக்கம் தேவையில்லை.

ஆனால், நேர்மையானவர்கள் விளங்கிக் கொள்கின்றனர், விளங்கிக் கொள்ளும்போது மகிழ்ச்சி அடைகின்றனர்.

உண்மையின் நெறிமுறைக் கட்டளையினால் அவர்கள் மகிழ்ச்சி அடைகின்றனர்:

உணரக்கூடிய மனத்தைப் பொய்யான தோற்றங்களால் ஏமாற்ற முடியாது;

எல்லாத தோற்றங்களுக்கு முன்னும், அது நன்மையில் மகிழ்ச்சி அடைகிறது.

நிகழ்வுகள் தாக்கும்போது, 'நன்மைத் தவறி விட்டது' என அது நினைத்துக் கொள்வதில்லை;

வெளியே உள்ளவை தோல்வியுறும்போது, "நேர்மையானவர்கள் என்னை ஆதரிக்கவில்லை" என்று துன்பம் நேரும்போது அது வருந்துவதில்லை;

"ஓ! உண்மையே! என்னைப் பாதுகாத்து எனக்கு ஆதரவு அளிக்கவில்லை" என்று கூற முடியாது.

உண்மை, எண்ணத்திலே உள்ளது, பொருளில் இல்லை!

அது நெஞ்சங்களிலே குடியிருக்கிறது, வெளியில் காணப்படும் பழக்கத்தில் இல்லை!

அது, உள்ளே உள்ள பகைவர்களை அழிக்கிறது, வெளியே உள்ள இடர்களுக்கு அதன் பின்னர் ஆற்றல் இல்லாது போகிறது.

துன்பத்தை ஏற்படுத்தும் கொடுக்கு அழிந்து போகிறது. அவற்றின் தீங்குகள் கலைக்கப் படுகின்றன.

முழுமை பெற்றவர்களின் அமைதியை என்றும் அழித்து விட முடியாது.

# 3

உள்ளத்தில் தூய்மை உள்ளவர்கள் உள்ளிருந்தே பாதுகாக்கப்படுகின்றனர்.

நிறைவு பெற்றவர்கள் உண்மையாகவே நன்மையினால் காக்கப்படுகின்றனர்;

அவர்கள் நன்மையின் அறமுறைக் கட்டளையினால் உயர்த்தப்படுகின்றனர்.

உண்மையின் அறிவைக் கொண்டு அவர்கள் உயர்த்தப் படுகின்றனர்.

அவர்கள் நிமிர்ந்து நிற்கின்றனர், விழுந்து விடுவதில்லை.

மனிதனால் அது முழுவதையும் மாற்றிவிட முடியாது.

தவறு மறைந்து விடுகிறது, ஆனால் உண்மை தொடர்ந்து நிலைக்கிறது.

மனிதர்கள் விழுந்து விடுகிறார்கள், ஆனால் உண்மை மாற்றம் அடையாது.

அது தொடர்ந்து நிலைக்கிறது.

அது நிலையானது, அழிந்துவிட முடியாதது.

இங்குதான் அறிவர்களின் புகலிடம் உள்ளது;

இங்குதான் அரும்பெரும் தூய்மையானவர்களின் பாதுகாப்பு உள்ளது;

இங்குதான் முழுமையானவர்களின் மகிழ்ச்சியுள்ளது—

உண்மையுடன் ஒன்றாகவே இருந்து அவர்கள் நிலையான அமைதிக்கு வந்து விட்டார்கள்.

எவன் உண்மையுடன் தானும் ஒன்றாகிறானோ, அவன் உண்மையை எதிரொளிக்கின்றான்—

அவன் மனம் தளராதவன், அச்சமில்லாதவன், மேன்மையானவன்.

அவன் மாற்றம் அடைவதில்லை, ஆனால் என்றும் அவன் உண்மையாகவே இருப்பான்.

ஆயும்போது, அவன் தடுமாற்றமடைவதில்லை;

கடுமையாகத் தாக்கப்படும்போது அவன் விடுவதில்லை.

தூய்மையிலும் அமைதியிலும் நிலைபெற்று, பரிவிரக்கத்திலும் பலத்திலும் திடமாக்கப்படுகின்றான்.

தீவினைகளுக்காக யார் புலம்புகிறார்கள்?

விடுதலைக்காக யார் தட்டுத்தடுமாறி தவிக்கிறார்கள்?

அவன் தன்னைத்தானே தூய்மை ஆக்கட்டும்.

நிலைப்பதற்காக யார் தேடிக் கொண்டிருக்கிறார்கள்?

அவன் தன்னைத்தானே தூய்மையாக்கட்டும்;

உண்மைக்கு அவன் வரட்டும்;

நல்லவற்றைப் பயிற்சி கொள்வதிலே அவன் அமைதி காணட்டும்.

பொருள்கள் யாவும் நிலை அற்றவை.

அவற்றிற்கு நிலையான பாதுகாப்பில்லை.

உண்மையே நிலையானது.

எல்லா மாற்றங்கள் ஊடாகவும் அதற்கான பாதுகாப்பை உண்மையே நிலைபெற வைக்கிறது.

மிக்க வேதனையாலும் மனக்குழப்பத்தினாலும் தீய செயல்கள் வெளிப்படுத்தப்படுகின்றன;

நற்செயல்களோ பெருமகிழ்ச்சியிலும் அறிவாற்றலிலும் நன்கு நிலை நிறுத்தப்படுகிறது.

நம்பியவரை ஏமாற்றாத நண்பனே, உண்மை;

என்றும் கைவிட்டுவிடாத பாதுகாவலன்.

உலகம் தோல்வியடைகிறது, ஏமாறுகிறது.

அது, வாடி வதங்கி, கனவுபோல் மறைந்துவிடுகிறது உண்மை நிலைக்கிறது.

அது மேலும் தெளிவு பெற்று உண்மையான நிலையை எய்துகிறது.

எவரெவர் உண்மையை அறிந்து உணர்கிறார்களோ அவர்களே நிறைவு அடைந்தவர்கள்.

உண்மையால் பாதுகாத்து மெய்யாக ஒரு பாதுகாவலனைக் கண்டு கொண்டவர்கள்.

பணிவுள்ளவர்கள் செருக்குள்ளவர்களிடமிருந்து காப்பாற்றப்படுகின்றனர்.

தூய்மையானவர்கள் தூய்மையற்றவர்களிடமிருந்து காப்பாற்றப்படுகின்றனர்.

கபடமற்றவர்கள் பேராசைக்காரர்களிடமிருந்து காப்பாற்றப்படுகின்றனர்.

அன்புள்ளவர்கள் வெறுப்பவர்களிடமிருந்து காப்பாற்றப்படுகின்றனர்.

ஒளிவு மறைவின்றி செயல்படுவோரின் முன்னிலையிலிருந்து பேரவா விரைவாகவே ஓடிவிடுகிறது.

அமைதியானவர்கள் தங்கியுள்ள இடங்களுக்குள் சண்டை சச்சரவு புகுந்துவிட முடியாது.

அறிவொளியின் அடிச்சுவடுகளில் முட்டாள் அடி வைத்து நடப்பதில்லை.

உண்மையே உண்மையின் பாதுகாப்பு.

முன் ஏற்பாடு எதுவுமின்றி அது பாதுகாப்பை அளிக்கிறது.

அது மாறுவேடங்களை நீக்கிவிட்டு, இயற்கையாகவே அமையப் பெற்ற மெய்மையினால், தானே பாதுகாப்பை அளிக்கிறது.

அதன் வெளிச்சம் எல்லா இருளையும் அகற்றுகிறது.

அது, பொய்யானவற்றைக் காட்டிக் கொடுத்து, மெய்யானவற்றை வெளிக் கொணர்கிறது.

உண்மையின் முன்னால் குற்றம் வீழ்ச்சியடைகிறது.

தற்காப்பிற்கான கருவி அடித்து நொறுக்கப்பட்டு அதன் வாளும் முறிகிறது.

ஆம்! அது கீழே வீழ்ந்துவிட்டது, அதனால் எழ முடியாது.

அது உதவியின்றி இருக்கிறது.

போராடும் வீரனோ பாதுகாவலனோ இல்லை.

தவறுக்கு முன்னால் உண்மை வீழ்ச்சி அடைவதில்லை.

ஆற்றல் உள்ளவர்களை ஆற்றல் அற்றவர்களால் வெற்றி பெற முடியாது.

சிறுமையர் பெருமையரை அடக்க முடியாது.

அடிமை ஆண்டைக்குக் கட்டளையிடுவதில்லை.

எல்லாமே உண்மைக்குக் கட்டுப்பட்டுள்ளன.

நேர்மையானவர்களுக்கு உண்மைதான் பாதுகாக்கும் கருவி.

தூய்மையானவர்களுக்குப் புகலிடமும் அதுவே;

அறவாணர்களின் வழிக்கு ஒளியூட்டுகிறது.

உண்மை ஒப்புயர்வற்றது;
உண்மை யாராலும் வெல்ல முடியாதது;
உண்மை என்றென்றும் வெற்றிக்களிப்புடையது.

## புனித உரையாடல்

### ஆசிரியனும் மாணாக்கனும்

வணக்கம்!

உண்மையை நாடும் நீங்கள் அனைவரும் மகிழ் வுறுங்கள்!

உண்மையை வேட்பவர்களே!

நீங்கள் அனைவரும் உங்கள்வேலையை ஒழித்துவிட்டு களி கூருங்கள்!

காலைக் கதிரவனைக் காணும் பனி போல உங்கள் கவலைகள் எல்லாம் மறைந்துவிடும்;

உங்கள் ஐயங்களெல்லாம் மறைந்து போகும் இருள் போன்றது;

இரவில் நீங்கள் காணும் கனவு போன்றது உங்கள் துயரங்கள்.

மாணவனின் பலத்த குரலை ஆசான் கேட்டு விட்டார்;

மாணவன் அணியமானான், ஆசான் அருகிலேயே இருந்தார்.

மாணவன் ஆவலுடன் கவனித்தான், ஆசான் விளக்கினார்.

## தேடுவதும் காண்பதும்

மாணவன் : அறிவு எங்கே உள்ளது?

உண்மை எங்கே?

அமைதி எங்கே?

நான் துயருற்று இருக்கிறேன், அதற்கு மனிதர்களி னால் எவ்வித ஆறுதலையும் பெற முடிவதில்லை;

நான் வழி தவறிவிட்டேன்; மனிதர்களின் அறிவுரை களினால் என் மனத்திற்கு உறுதியைப்பெற முடியவில்லை;

ஆம்! என்னில்கூட நான் உண்மையைக் காணவில்லை

எனது ஐயங்களுக்கும் துன்பங்களுக்கும் தீர்வு இல்லை.

என் நெஞ்சத்தின் இறுமாப்புடன் நான் போராடிக் கொண்டிருந்தேன்;

எனது கருத்துகளினால் மனிதர்கள் மனநிறைவைப் பெற்றுள்ளனர்.

நல்லவற்றிற்குப் பதிலாக தீயவற்றைத் தவறுதலாகக் கொண்டு விட்டேன்;

அறிவிற்குப் மாற்றாக அறியாமையை அடைந்து விட்டேன்;

அதனால், இப்போது நான் தனிமையில் உள்ளேன், என் குரலைக் கேட்பதற்கு யாருமில்லை;

நான் அழுதாலும் என் குரலைக் கேட்டு வர யாருமே இல்லை.

ஆசான் : அப்படியில்லை, உன்னுடன் நான் இருக் கிறேன். உன் குரலைக் கேட்கிறேன். உன்னைக் காப் பாற்ற உறுதி அளிக்கிறேன்.

மாணவன் : நீங்கள் யார், எனக்கு உறுதி அளிக்க?

ஆசான் : நான் தான் உண்மையின் ஆவி.

மாணவன் : ஓ ஆண்டவைகயே! ஓ! உண்மையின் உயிர்ப்பே! இதற்கு முன்னர் நீங்கள் ஏன் என்னிடம் வரவில்லை? இவ்வளவு நீண்ட காலமாக ஏன என்னைத் தனிமையில் விட்டீர்கள்?

ஆசான் : இதுவரை நீ தனிமையில் இருக்கவில்லை;

செருக்கே உனது தோழன், அந்தச்செருக்கே உன்னை நிறைவுப்படுத்தியது.

எங்கே செருக்கு குடியிருக்கிறதோ, அங்கே நான் வருவதில்லை;

அதன் தற்புகழ்ச்சிகளை எவன் கேட்கிறானோ, அவனால் என்னுடைய குரலைக் கேட்க முடியாது.

என்னுடைய வடிவத்தைக் காண முடியாதவாறு உனது தற்புகழ்ச்சி உன்னைக் குருடாக்கி விட்டது;

தன்னல வெற்றிக் களிப்பு உன்னைச் செவிடாக்கி விட்டது;

அதனால், நான் உன்னை அழைத்தபோது

உன்னால் அந்த அழைப்பைக் கேட்க முடியவில்லை;

தன்னலத்துடன் தேடினாய், அதனால் நீ தனியனாகி விட்டாய்,

அதனால் என்னிடம் வருவதற்கான நெறி உனக்கு மறைக்கப்பட்டது.

ஆனால், இப்போது செருக்கினை நீ அகற்றிக் கொண்டதால், உன்னால என்னைக் காணவும் என் குரலைக் கேட்கவும் முடிந்தது.

வினவு—விடை தருவேன்;

தேடு! அது உனக்குக் கிடைத்துவிடும்.

மாணவன்: எனக்கு ஆறுதலை அளியுங்கள் என் மதிப்புக்கு உரிய ஆசானே! நான் சோர்வடைந்து விட்டேன். என்னைப் பலம் மிக்கவனாக ஆக்குங்கள்;

நான் பலம் இழந்தவனாக நிற்கிறேன்.

அறிவை அளியுங்கள். நான் அறிவில் பின்னடைந்துள்ளேன்.

ஆசான் எவன் தன்னலத்தைவிட்டு என்னிடம் தஞ்சம் புகுகிறானோ, அவன் எக் காலத்திலும் தனித்து விடப்படமாட்டான்;

எனது சொல்லே அவனுக்கு ஆறுதலை அளிக்கும்;

எனது அறமே அவனின் பலம்,

எனது கட்டளைகளே அவனுக்கு அறிவூட்டலும், அறிவும்.

மாணவன்: சொல்லுங்கள், நான் கேட்கின்றேன்;

உங்கள் அறநெறிகளை வெளியிடுங்கள், அதன் வழியே நான் செல்வேன்;

எனக்குக் கட்டளையிடுங்கள், நான் உங்கள் தொண்டன்; உங்களுக்குப் பணிவேன்; நீண்ட காலமாகத் தேடிக் கொண்டிருந்த ஆசான் நீங்களே என்பதனால் உங்களை இப்போது கண்டு கொண்டேன், உங்களிடமிருந்து நான் பிரியேன்.

எவன் ஒருவன் தன்னலத்தின் பின்தொடர்கின்றானோ அவனை நான விலக்கிக் கொள்வேன்;

ஆனால், எவன் ஒருவன் தன்னலத்தை விலக்கிக் கொள்கிறானோ அவன் எப்போதும் என்னுடனேயே இருப்பான்.

மாணவன் : இக் கணத்திலிருந்தே!உங்களைப் பற்றிக் கொள்கிறேன்;

நான் வீணான, வெறுமையான பேராசைகளைப் பின் தொடர்ந்தேன்,

அதனால், பொய்ம்மை எனும் மயக்கத்தின் வலையில் அகப்பட்டதால் உங்களின் முன்னைய நிலையை நான் அறிந்திலேன்;

ஆனால் இப்போது, என் ஆசானே! உங்களை நான் கண்டு கொண்டேன்.

உங்கள் மொழிகளைக் கேட்டுப்பணிவுடன் செயல்படும் உங்கள் குழந்தையாக இருப்பேன்;

அறிவூட்டும் உங்கள் வாய்மொழிகளைக் கேட்கும் உங்கள் மாணவனாக இருப்பேன்;

வழிகாட்டியாக நீங்கள் என்னை எங்கு அழைத்தாலும் தொடரும் உங்கள் மாணவனாகவே இருப்பேன்.

ஆசான் : பணிவு உனதே, ஓ மாணவனே! உன்னை என்னில் ஏற்றுக் கொண்டேன்.

நீ எனது பேரரசுக்குள் செல்வதற்கு உள்ள வாயிலுக் குள் நுழைந்து விட்டாய்.

நேர்மையான அரசாட்சிக்குள்ளும் தகுதியின் மிகுதி யால் நீ புகுந்து விட்டாய்.

இப்போதிருந்தே நீ தன்னலத்தைவிட்டு உண்மை யையே பின்பற்றுவாய்;

நீ எடுத்துக் கொண்ட கடும் முயற்சியின் பயனாகவே நுழைந்துவிட்டாய்;

நீ விழிப்புடன் தேடிக் கொண்டே இருந்ததானால் அறிந்து விட்டாய்.

நீ பெற விரும்பியதைப் பெற்று விட்டாய்.

நீ எது வேண்டுமானாலும் கேள், நான் மறுக்க மாட்டேன்.

## வழியில் நுழைதல்

மாணவன்: ஆசான்களுக்கு ஆசானே! எனக்குக் கற்பியுங்கள்.

ஆசான் : வினவினால் விடையளிக்கிறேன்.

நான் பலவற்றைக் கற்றுள்ளேன். ஆனால் இப்போதும் அறிவற்ற நிலையிலே உள்ளேன்;

கல்விச் சாலையில் உள்ள ஏடுகளைக் கற்றேன்; ஆனால் அதன் மூலம் அறிஞன் ஆகவில்லை;

மறை நூல்களையெல்லாம் மனப்பாடம் செய்தேன்; ஆனால் அமைதி என்னிடமிருந்து மறைந்து கொண்டது.

ஆசிரியரே! அறிவு பெறுவதற்கான வழியை எனக்கு அறியச் செய்யுங்கள்;

அமைதியின் வழிக்கு உம் குழந்தையாகிய என்னை அழைத்துச் செல்லுங்கள்.

ஆசான் : மாணவனே! அறிவைத் தெரிந்து, பெறுவதற்கான வழி, உள்ளத்தைத் தேடுவதன் மூலமே உனக்கு வெளிப்படுகின்றது;

நேர்மையானவர் தம் செயல்களிலே அறிவின் பெருவீதியை நீ அறிந்து கொள்வாய்;

பழியற்ற வாழ்க்கையினால் அமைதிக்கான வழியைக் கண்டு கொள்வாய்.

மாணவன் : ஓ! ஆசானே! எனது நிலையற்ற மனத்தைப் பொறுத்து அருளுங்கள்.

எண்ணற்ற கருத்துகளினால் நான் தடுமாறிக் கொண்டிருக்கிறேன்;

பல கல்விச் சாலைகளில் பயின்றதனால் திகைப்பு அடைந்துள்ளேன்;

மாயத் தோற்றங்கள் என்னுடைய கண்களை மறைக்கின்றன.

ஐயங்கள் என்னைச் சூழ்ந்து கொள்கின்றன.

அதனால், நான் எங்கே செல்ல வேண்டும் என்பதற்கான வழியைக் காணேன்.

எவ்வாறு தேடுவதெனக் கற்றுக் கொடுங்கள்;

எப்படி அதனைப் பயில்வது என்பதனையும்,

குறை கூறா வாழ்வெனும் உடையை அணியவும் கற்றுக் கொடுங்கள்.

ஆசான் : ஓ, மாணவனே! மாயத் தோற்றங்களும் ஐயங்களும் உன்னுள்ளேயே உள்ளன.

அதேபோல், மெய்ம்மையும் உறுதிப்பாடும் உன் உள்ளேயே இடம் பெறுகின்றன.

உனது தவறுதல்களினால் நீ குருடனாகியுள்ளாய்.

அந்தத் தவறுகளை அகற்றிவிட்டால் உண்மையை நீ அறிந்து கொள்வாய்.

அதனால், புனிதமான மூழ்க (தியான)த்திலே ஈடுபடு

உண்மையைத் தேடுவதுடன் உன் உள்ளத்தையும் தேடு, அப்போது தன்னலத்தில் உள்ள எல்லாவற்றையும் அங்கிருந்து தூக்கி வெளியே வீசி விடு.

மாணவன் : தன்னலத்தினால் ஏற்படுவது என்ன?

ஆசான் : பேராசை, தீவிர உணர்ச்சி, நான் எனது என்ற தற்பெருமை.

இவற்றிலிருந்து எழுகின்றது தன்னலம் என்னும் மாயத் தோற்றம்.

அந்த மாயத்தோற்றமே உண்மைக்குத் தடையாக உள்ளது.

பேராசைகளில் இருந்து விடுபட்டுக் கொள்.

தீவிர உணர்ச்சிகளை வெற்றி கொள்.

தற் பெருமையைத் தொலைவில் நிறுத்தி வை.

அதன் பின்னர் மாயத் தோற்றங்கள் விடுபட்டுப் போவதுடன் எல்லா வகையான உனது ஐயங்களும் மறைந்து விடும்.

மாணவன் : ஓ ஆசானே! என் முன்னே உங்களால் வைக்கப்பட்டுள்ள பணியோ பெருமைமிக்கது.

நான் செய்ய வேண்டும் என நீங்கள் எனக்குக் கட்டளை இட்டிருப்பதோ மிகவும் கடினமானது.

அவற்றிலிருந்து விடுபடவும் உங்களால் எனக்குச் சுட்டிக்காட்டப்பட்டதுமான அந்த வழியோ செங்குத்தானது; எனக்குப் புதுமையானதாய் இருக்கிறது.

இயற்கையாகத் தோன்றிய ஆசை எனது இயல்பில் ஆழமாகவே வேரூன்றி விட்டது.

வெறி உணர்ச்சி, உலகியற் பொருள்களுடன் என்னை இறுகவே இணைத்து விட்டது.

ஆம்! ஆசையும் வெறி உணர்ச்சியும் எனது சரியான தன்னலங்களே;

என்னையே நான் துறந்துவிட வேண்டுமா?

அப்படியே இனிமையாகக் காணப்படும் எல்லாவற்றையும் நான் விட்டொழிக்க வேண்டுமா?

தன்னலத்தைப் பக்குவமாகப் பாதுகாப்பதற்கு மனிதர்கள் மிகுந்த அவாவுடன் இருக்கிறார்கள்;

என்றென்றும் அதனைப் பாதுகாத்து வைக்கவும், தாங்களே அதற்கு உரிமை கொள்ள வேண்டும் என்று ஆண்டவனை வேண்டித் தொழுகிறார்களே!

அவ்வாறு இருக்கையில், அதனை அழிந்துபோக நான் விட்டுவிட வேண்டுமா?

ஆசான்: என்னைப் பின்தொடர்ந்து வருவதாக நீ உறுதி எடுத்துக் கொண்டதனால், நீ அப்படியே செய்யத்தான் வேண்டும்.

மாணவன்: ஆம்! நான் உறுதி கொண்டுவிட்டேன் அதனால், உங்களைப் பின் தொடர்வேன்.

ஆசான்: எல்லா மனிதர்களும் எப்படித் துன்புறுகிறார்கள் என்பதைப் பார்?

ஏனெனில், அவர்கள் தன்னலத்தைப் பாதுகாப்பதற்காக அவாக் கொண்டிருக்கின்றனர்; என்றென்றும் பாதுகாக்கவும் அதற்கு உரிமை கொண்டாடவும் மிக்க பாடு எடுத்துக் கொள்கிறார்கள்.

ஆசையில், தற்பெருமையில், வெறி உணர்ச்சியில் நிறைந்திருப்பது கிளர்ச்சியும் அமைதியின்மையும்.

என்னில் தனித்து இருப்பது அமைதி.

சோர்வுற்றவர்களும் துன்புற்றவர்களுமே உலகம், என்னை அவர்கள் அறிந்திருக்கவில்லை;

ஆனால், என்னிடம் சோர்வே இல்லை.

சோர்வும் துன்பமும் என்றன் இருப்பிடத்திற்கு வர முடியாது.

என் இருப்பிடம் தூய்மையான நெஞ்சம்.

நேர்மை மிக்க மனமே எனது ஆலயம்.

குற்றமற்றவர்களின் வாழ்வே புனிதமான எனது உறைவிடம்.

மாணவன் : உங்கள் இருப்பிடத்தில், உங்கள் ஆலயத்தில்;

உங்களைத் தஞ்சம் அடைகின்றேன்.

ஆம்! உங்கள் புனித உறைவிடத்திலும்தான்.

ஆசான் : தூய்மையான நெஞ்சத்தில் ஆசைக் கறைப் படிவதில்லை;

நேர்மையான மனம், வெறி உணர்ச்சியினால் தூண்டப் படுவதில்லை.

குற்றமற்ற வாழ்வில் தன்னலம் பற்றிய எண்ணமே இல்லை;

உனது நெஞ்சத்தைத் தேடிப் பார்த்து உண்மையைப் பின்தொடர்வாய்.

ஆசை, வெறி உணர்வு, தற்புகழ்ச்சி இவற்றிற்கான தன்னலத்தை விலக்கி வை.

அவற்றை மறு; வெற்றி பெறு; விட்டுவிடு.

அவற்றின் சாயலோ, ஒரு சிறு பகுதியோ உன்னுடன் இருக்கவே கூடாது,

ஏனெனில், எல்லாத் தடுமாற்றங்களுக்கும் அவையே பொறுப்பானவை.

அவையே எல்லா அல்லல்களுக்கும் மூல காரணங்கள்

துன்பமும், துயரமும் அமைதியின்மையின் ஊற்றே.

எனவே, என்னிடத்தில் வந்து தங்கிவிடு.

மாணவன் : உண்மைக்கான வழியை எனக்குச்சுட்டிக் காட்டுவிட்டீர்கள்,

தன்னலம் போக்குவதற்கான புனிதவழியையும் காட்டிவிட்டீர்கள். அதன் வழியே நான் நடப்பேன்.

ஓ! உண்மையின் ஆசானே! எனது தீர்மானம் உங்களில் பதிந்துவிட்டது.

ஆசையை வீசிவிட்டு, உங்களைப் பற்றிக்கொள்வேன்;

கொடிய பாழ் உணர்ச்சிகளுக்குச் செவி சாய்க்காமல் தங்களது குரலை மட்டுமே கேட்டுக் கொண்டிருப்பேன்;

எனது வேட்கையை நாடிச் செல்லாமல் தங்களது புனித அறமுறைக் கட்டளைகளுக்குப் பணிவேன்!

ஆம்! எனது அடிகளைத் தாங்கள் காட்டிய நெறியில் பதித்துவிட்டேன்.

தங்கள் தொண்டனாக என்னை, ஒளியையும் அமைதியையும் காண வழி நடத்திச் செல்லுங்கள்.

ஆசான் : ஓ அன்பனே! நேர்மையான வழிக்குள் நீ வந்து விட்டாய்;

அறிவைப் பெறும் வழியில் உனது அடிகளைப் பதித்து விட்டாய்;

எனவே பொது அறமுறைக் கட்டளைகளை நன்கு அறிந்து கொள்.

அறிவொளி உன்னை ஒளி மயமாக்கும்.

நீ கால் தவறி விழும்போதெல்லாம் உன்னை நட்பமைதிக்குக் கூட்டிச் செல்வேன்.

## ஒழுங்குமுறையும் தூய்மைப்படுத்துவதும்

மாணவன் : ஓ! ஆசானே! நான் துயரத்தினால் தவிக்கிறேன்!

என் கால்கள் சோர்வடைகின்றன. இருள் என்னைச் சுற்றி நெருங்குகிறது;

என்னைத் தனிமையில் விட்டுச் சென்று விடாதீர்கள்; என் உதவிக்கு இப்போதே வாருங்கள்;

எனது ஆசைகளோ பலம் மிக்கவை. அவற்றின் வழக்கமான இன்பங்களுக்காக அவை கதறி அழுகின்றன.

எனது உணர்வுகள் வெறித் தன்மையைக் கொண்டவை அதனால் அவற்றின் பலத்தால் என்னை வெல்ல வருகின்றன;

பிழையான எனது கருத்துகளின் குரல்கள் தங்கள் அதிகாரக் கோரிக்கைகளினால் என்னைச்சோர்வு அடையச் செய்கின்றன.

வழியோ இருளானதும், பின் தொடர்வதற்கு கடும் முயற்சி எடுக்க வேண்டி உள்ளது'

ஓ, என் ஆசானே! தங்களின் அறிவொளியை என்மேல் படர விடுங்கள்;

உங்கள் நல்லுரை எனும் மணம் தரும் அருமருந்தால் என்னைக் குணப்படுத்துங்கள்.

ஆசான் : ஓ! அன்பனே! தன்னலப் பற்றினால் ஏற்பட்டதுதான் உனது துயரம்;

என்னிடம் துயரம் என்பதே இல்லை.

உன்னைச் சுற்றியுள்ள இருள் எல்லாம் தன்னலப் பற்றினால் தூண்டப் பெற்றதே;

என்னிடம் இருளே இல்லை.

உண்மை புனிதமானது; துயர் அற்றது;

விம்மலும், சோர்வும் கதறி அழுகையும் உண்மையில் இல்லை.

இப்போதுகூட, உனக்குத் தெரியாவிட்டாலும், உனது வழியில் எல்லாம் எனது ஒளி மிளிர்கிறது;

ஆனால், நீ காண்பதெல்லாம் உலகியல் தன்னலத்தின் இருளான மாயத்தோற்றம் மட்டுமே.

விடாது முன்னேறிச் சென்று, உண்மையைப் பற்றி மட்டுமே சிந்தித்துக்கொள்;

நீ பின்னடைந்தோ, உனது தூய்மையான முடிவினின்றோ உனது மனத்தை விலக்கி விடாதே;

நீ உறுதி பூண்டிருக்கும் அன்பு வெற்றியானது; தன்னலத்தை வெற்றி கொள்வதைவிட மிகப் பெருமை வாய்ந்தது;

நம்பிக்கை வை, வெற்றி கொள்வாய்.

மாணவன் : ஓ ஆண்டகையே! என்னைப் பற்றிக் கொண்டிருக்கும் இருளானது வலிமை மிக்கது, எனவே என்னைத் தாங்களே வழி நடத்துங்கள்.

தன்னல எண்ணக் கருமுகில்கள் என்னைச் சூழ்ந்து கொண்டுள்ளன.

என் மனத்தேயுள்ள பகைவர்கள் தொடர்ந்து என்னைத் தாக்கிக் கொண்டேயிருக்கின்றனர்

என் சூழ்ச்சியில் பின்னப்பட்ட வலையில் என் கால்கள் சிக்கிக் கொண்டுள்ளன.

அதனால், நான் உறுதியாக நடக்க வேண்டும் என்று நினைக்கும் போதெல்லாம் தடுக்குண்டு வீழ்கின்றேன்;

ஆம்! நான் பலமுறை அப்படி விழுந்து பலமாகப் புண் பட்டுள்ளேன்.

ஓ தலைவனே! அந்த இருளானது நீங்குமா?

இந்த முயற்சி வெற்றியில் முடியுமா?

மிகுதியான என் துயரங்களுக்கு முடிவுண்டா?

ஆசான் : உனது உள்ளம் தூய்மையாக இருந்தால் இருள் நீங்கிவிடும்;

தீவிரமான, கொடிய ஆசைகளிலிருந்து உனது மனம் விடுபடும்போது, நீ முயற்சியின் முடிவை அடைவாய்.

தன்னலத்தைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் அழியும்போது, துயரத்துக்கான ஏது எதுவுமே இருக்காது.

கட்டுப்பாடான ஒழுங்கு முறைகளுக்கும் தூய்மைக்கும் வழிகாட்டும் வழியில் நடக்கின்றாய்;

என் எல்லாத் தொண்டர்களும் அதே வழியில்தான் நடந்து செல்ல வேண்டும்.

அறிவொளிக்குள் நுழையும் முன்னரும்,

உண்மையின் முழுமையான புகழைப் பெறு முன்னரும்,

தூய்மை அற்ற எல்லாமே அகற்றப்பட வேண்டும்.

பொய்மாயத் தோற்றங்கள் யாவும் விரட்டப்பட வேண்டும்;

உனது மனம் என்னும் கோட்டைக்குள் தீயவை புகாத வாறு முயற்சியெனும் அரண் அமைக்க வேண்டும்.

இருள் உன்னைச் சுற்றி வளைத்துக் கொண்ட போதிலும்,

ஒவ்வொரு செயலிலும் தீய கவர்ச்சி வந்து உன்னைத் தாக்கிக் கொண்டாலும்,

உனக்கு வெளிப்படையாகவே உனது புண்கள் உன்னைத் துன்பப்படுத்தினாலும்,

உண்மையின் மேல் நீ வைத்திருக்கும் நம்பிக்கையை தளர்த்தாதே;

நானே உண்மைக்கு இறைவன்; உன்னை உற்றுக் கவனித்துக் கொண்டிருக்கிறேன் என்பதை நினைவில் கொள், மறந்துவிடாதே.

மாணவன் : உண்மையின்மேல் நான் வைத்திருக்கும் நம்பிக்கையோ மிகவும் ஆற்றல் வாய்ந்தது.

அதனால், நான் மறக்கமாட்டேன், உம்மையே நினைத்துக் கொண்டிருப்பேன்.

ஆசான் : கட்டுப்பாடான ஒழுங்கு முறைக்கும் தூய்மைக்கும் கொண்டு செல்லும் வழியில் உண்மையாகவே நடந்து செல்லல்.

அதனைப் புறக்கணிக்காமலும் விட்டு விடாமலும் உன்னால் ஒழிக்கப்பட்ட இன்பங்களை நுகர வேண்டும் என்று நினைத்துக் காத்திருக்காமை;

இவை போன்ற உனக்குத் தேவையானவற்றைக் கற்று அறிந்து கொள்வாய்.

பழிகளின் தன்மையையும் தீய கவர்ச்சியின் பொருளையும்;

துன்பத்தின், துயரத்தின் காரணங்களையும் அவற்றினின்றும் விடுபடுவதற்கான மருந்தையும்;

தன்னலத்தின் அழிவையும் அதன் நிலையற்ற இன்பங்களையும்,

என்றென்றும் நிலைத்திருக்கும் உண்மையையும், அது அளிக்கும் அமைதியையும்,

அறியாமையின் அறிகுறிகளையும்,அறிவை உண்டாக்குவதற்கான காரணத்தையும்,

என்றென்றும் நலமே இருப்பது எது என்பதையும்,

நீ கற்று அறிய வேண்டியுள்ள அல்லல் மிக்க தன்னலத்தையும், உண்மையின் பேரின்பத்தையும்,

அத்துடன் மறைந்துபோகும் மாயத்தோற்றத்தையும், நிரந்தரமான இயற்பொருளையும், அறிந்து உணர வேண்டும்.

உண்மையாக முயற்சியுடன் இருந்தால் உனக்கு இவை எல்லாவற்றையும் கற்றுத் தருவேன்.

மாணவன் : தங்களைவிட்டு என் மனத்தையும் பார்வையையும் வேறு பக்கம் திரும்பவோ தங்களின் தூய்மையான வழியைவிட்டு விலகவோ மாட்டேன்.

ஆசான் : ஓ அன்பனே! நான் சொல்வதை மீண்டும் கேள்.

கட்டுப்பாடான ஒழுங்குமுறையாலும், தூய்மைப்படுத்தும் வழியில் பற்றுடன் நடந்து செல்வதனாலும்,

இதனை விட்டுவிடாமல் தொடர்ந்தும் இதனுடன் இயைந்து போவதனாலும்,

திருமாணாக்கரின் குறைவான மூன்று ஆற்றல்களை முயற்சி செய்து பெற்றிடுவாய்;

அத்துடன், பெருமைமிக்க மூன்று ஆற்றல்களையும் பெற்றுக் கொள்வாய்.

மேலும், குறைவான, பெருமையான ஆற்றல்கள், வெல்ல முடியாதவை என்பனவற்றை உனக்கு அளிக்கும்.

'அவற்றின் உதவியால் எல்லாத் தீவினைகளும குறைக்கப்படும்;

மிக விரைவில் நீ வெற்றி அடைவாய்.

அதனால், உயர்வான இடத்தை அடைவதில் நீ வெற்றி அடைவாய்.

மாணவன் : தேவையான பெருமைமிகு ஆற்றல் யாவை?

ஆசான் : தன்னடக்கம், தன்திற நம்பிக்கை, உற்றுணர்தல் இவையே குறைவான மூன்று ஆற்றல்கள்.

உறுதியுடன் இருப்பது, பொறுமைப் பண்பு—இவையே பெருமை வாய்ந்த ஆற்றல்கள்.

எப்போது உனது மனம் நன்கு கட்டுண்டு இருக்கின்றதோ,

எப்போது நீ வெளியிலிருந்து உதவிகளை நம்பியிருக்காமல் உண்மையை மட்டுமே நம்பியிருப்பாயோ,

எப்போது எவ்வித விடுபாடுமின்றி உனது எண்ணங்களும் செயல்களும் உன்னால் உற்றுக் கவனிக்கப் படுமோ,

அப்போது அந்தக் குறைவான மூன்று ஆற்றல்களும் உனதாகி விடும்.

இந்த ஆற்றல்களுடன் நீ அந்தப் பெரும் இருளைப் போககிவிடுவாய்;

அரும் பெருமை வாய்ந்த ஒளியை நீ அடைவாய்;

அப்படி அடைந்ததும் உண்மையுடன் மிக விரைவாகவே பிணைக்கப்பட்டு விடுவாய்.

எல்லையில்லா அமைதியுடையவனாக நீ ஆகி விடுவாய்.

எதனாலும் மாற்றவோ அழிக்கவோ முடியாதவாறு பண்பாளனாகி விடுவாய்.

அப்போது, அந்த மூன்று ஆற்றல்களும் உனதாகி விடும்.

அதன் பின்னர் ஒழுங்கு, கட்டுப்பாடு என்ற வழியின் முடிவுக்கு வந்துவிடுவாய்.

அறிவெனும் உயர்வான வழியில் முன்னேறிக் கொண்டிருப்பாய்.

அப்படி அந்த அறிவு வழியில் நடந்து செல்லும்போது, உனது துயரமெல்லாம் மறையும்.

உனது இருளானது என்றும் திருப்பி வராமல் அகன்று விடும்.

மகிழ்ச்சியும் ஒளியும் உனது காலடிகளில் காத்திருக்கும்.

மாணவன் : நான் மட்டும் உறுதி செய்யப்பட்டுள்ளேன்.

ஓ, ஆண்டகையே! தங்களைத் தொடர்வதற்கு நான் வலிமை பெற்றுள்ளேன்.

அறிவு என்னும் வாய்மொழியால் எனக்கு ஆறுதலை அளித்தீர்கள், அதனால் தங்களுக்கு நான் கீழ்ப்படிகின்றேன், தங்களது கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொள்கின்றேன்;

உண்மை பற்றிக் கூறி உந்தாற்றல் அளித்து எனக்குத் துணிவை ஊட்டி விட்டீர்கள்.

அறிவூட்டுதலுக்கான வழியைக் கற்பித்தீர்கள்.

ஆசான் : எவன் உண்மைக்கு அடிபணிகிறானோ அவன் புனிதமாக்கப்படுகிறான்.

அவன், மன அமைதியின்றி அல்லல்பட மாட்டான்.

ஆனால் அமைதிக்கான பேறு பெறுவான்.

## துறவு

மாணவன் : தூய ஆசிரியரே! தங்களது ஒளி எனது மனத்தை ஊடுருவிச் செல்கிறது.

எனது துயரத்திற்கும் தொல்லைக்கும் காரணங்களை இப்போது அறிகிறேன்.

மனித இனத்திற்குள்ள துயரத்தைப் புரிந்து கொள்கிறேன்.

ஏனெனில், எனது இன்னல்களே உலகத்தின் இன்னல்கள்;

துயரமும் தொல்லையும் தன்னலத்தில் வேரூன்றியுள்ளன என்பதைக் காண்கிறேன்.

தீமையும் துயரமும் தன்னலத்தின் ஆசைகளில் உள்ளன.

அதனால், தன்னல ஆசைகள் எல்லாவற்றிலும் இருந்து விடுபட வேண்டும்.

ஓ, ஆசானே! தன்னலத் துறவுப் பாதைக்கு என்ன வழிகாட்டுங்கள்.

மனத்திலிருந்து தன்னலத்தை எப்படி ஒழிப்பதுஎன்பது பற்றி எனக்குக் கற்றுத் தாருங்கள்.

துறவின் உண்மையை எனக்கு வெளிப்படுத்துங்கள்.

ஆசான் : துறவு, ஓ அன்பனே! அது இருவகை யானது.

எழுத்துருவிலும் உள்ளது.

உயிருணர்விலும் உள்ளது.

வெளியில் காணப்படும் பொருள்களையும் தனிப்பட்ட சில செய்கைகளையும் துறப்பது எழுத்துருவிலான பொய் யான துறவு.

மனத்தே உள்ள ஆசைகளையும் தூய்மைக் கேடுகளை யும் துறத்தலே மெய்ப்பொருளில், உயிருணர்ச்சியில் உள்ள உண்மையான துறவு.

விழிப்பாக இரு, மாணவனே! பொய்யெனக் கருதப் படும் துறவைத் துறந்து,

மெய்யெனக் கருதப்படும் துறவையே நீ கடைப்பிடி.

மாணவன் : உண்மை வழியிலுள்ள துறவு பற்றி மேலும் எனக்கு அறிவுறுத்துங்கள்.

அதனை நான் ஏற்று, அவ்விதமே செயல்படுவேன்.

அதனால், பிழையான, தப்பான வழிகாட்டும் துறவை நான் புறக்கணிப்பேன்.

ஆசான் : நீ செய்யும் எந்தச் செயலிலும் கைம்மாறு கருதாதே.

நீ பாடுபட்டுச் செயல்படும் எப் பணியிலும் பரிசினை எதிர்பார்க்காதே.

ஆசைகளை அகற்றிவிட்டு உனது எல்லாக் கடமை களையும் அன்பார்வத்துடன் செய்.

அதுவே மெய்யான துறவு.

உனக்கு ஏற்படவுள்ள ஆக்கத்தையோ இழப்பையோ கருத்தில் கொள்ளாதே.

உனது செயல்களினால் இன்பத்தைப் பெறவோ துன்பத்தை நீக்கவோ நினைக்காதே.

செய்ய வேண்டியவற்றுக்குத் தேவையான எல்லா வற்றையும் நேர்மையாகவே செய்—இதுவும் மெய்யான துறவே.

உலகிலிருந்து உன்னைத் தவிர்த்துக் கொள்ளாதே.

ஆனால், உலகத்திலும் அதன் இன்பங்களிலும் ஏற்படும் விருப்பிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்.

இவ் உலகில் உள்ள செயல்களை, உன் நலன்களைக் கருத்தில் கொண்டு செய்யாதே—

மீண்டும், இதுவே மெய்யான துறவாகிறது.

வெளியில் தோன்றும் பொருள்களால் ஒரு மனிதன் கெட்டவனாகி விடுவதில்லை;

அவனின் அகத்தில் உண்டாகும் கீழான ஆசைகளி னாலே மனிதன் தீயவனாகிறான்.

தன்னலத்தைப் பற்றிக் கொள்வதிலிருந்து விடுபடா திருப்பது அன்று, உலகைத் துறப்பது, இது பொயயான துறவு.

இன்னல்கள் எழுவது—

செல்வங்களிலிருந்தோ வறுமையிலிருந்தோ, மனைவி யிலிருந்தோ மக்களிலிருந்தோ, ஆற்றலிலும் தொண்டி லிருந்தும் அல்ல.

சோம்பலில் இருந்தும் தன் விருப்பிலிருந்தும்,

பேராவிலிருந்தும் பிறர்பொருள்கள்மேல் அளவுகடந்த ஆசை வைத்திருப்பதிலிருந்தும்,

வெறுப்பிலிருந்தும் தற்பெருமையிலிருந்தும், இன்னல் கள் எழுகின்றன.

உன்னேயுள்ள தீமையைத் துற; அப்போது உலகத்தினுள்ள பொருள்கள் உன்னைக் கெடுக்காது.

தன்னலம் பற்றிய எண்ணத்தைப் போக்கிவிடு அப்போது என்னதான் நீ செய்தாலும் அது உனக்கு உளைச்சலைத் தராது.

உனது எல்லாக் கடமைகளிலும் தன்னல எண்ணத்தைப் போக்கு, அப்போது துன்பம் உன்னை வெற்றி கொள்ளாது.

எவன், தன் கடமையை மிகவும் இக்கட்டானது என எண்ணி அதனைச் செய்யாது விட்டு விடுகிறானோ—

அதனால் மகிழ்ச்சி பெற விரும்புகிறானோ,

எவன், பலம் கிடைக்குமென எண்ணி கவர்ச்சியூட்டும் காட்சியிலிருந்து தப்பி ஓடுகிறானோ;

எவன், பேரின்பம் கிட்டும் என நினைத்து தனது கடமைகளிலிருந்தும் ஒதுங்கிக் கொள்கிறானோ,

அவன் பொய்யான துறவறம் பூணுகிறான்.

அவன் ஏமாற்றப்படுகிறான், அதனால் தூய்மையான உள்ளத்தைப் பெறுவதற்குத் தகுதி வாய்ந்தவனாவான்.

இறப்பு தவிர்க்க முடியாதது, உறுதியானது என அறிந்தும் தனது பதவியை விட்டு அகலாத போர் வீரனைப் போல,

தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணமின்றித் தனது கடமையில் மட்டும் அவன் கருத்தாகவே இருப்பதுபோல,

தன்னலம் பற்றிச் சிந்திக்காமல், மனந்தளராமல் தன் கடமைகளைச் செய்தவாறு எவன் உண்மையாகவே துறவு

கொள்கிறானோ அவனே உலகில் தனக்கு உரிய இடத்தில் இருப்பான்.

ஓ, அன்பனே! தன்னலத்திலிருந்து துறவு கொள்!

தன்னலத்துடன் சார்புடைய எல்லாவற்றிலுமிருந்தும் துறவு கொள்!

தன்னலத்தின் வெறி உணர்ச்சிகளிலிருந்தும் தவறான எண்ணங்களிலிருந்தும் துறவு கொள்!

தன்னலத்தின் செருக்கிலிருந்தும் எல்லாப் பிழைகளிலிருந்தும துறவு கொள்!

அதுவே மெய்யான துறவு.

அவ்வகையான ஈ(தியா)கமே அறிவொளி பெறவும் அமைதியுறவும் வழிகாட்டியாகிறது.

மாணவன் : ஆசிரியனே! தன்னலச் சார்புடையவை எவை எவை?

ஆசான் : பேராசைப்படலும், தன்னலத்திற்கு இடங் கொடுத்தலும், தன்னையே நாடி நிற்பதும், பேரவாப் படுதலும்,

வெறுப்பும் சினமும்,

திமிரும் தற்புகழும்,

ஐயமும் அச்சமும்—

இவையே தன்னலச் சார்புடையவை;

இவையே துறவு கொள்ளப்பட வேண்டியவை.

மாணவன் : மாசற்ற மெய்ப் பொருளே! இவற்றிலெல்லாம் நான் துறவு பூண்டு விடுவேன்.

எனது மனத்திலிருந்து இவற்றை நீக்கிவிடுவேன்.

எனது நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து இவற்றை ஒழித்து விடுவேன்.

ஏனெனில், இவை எவ்வாறு குருட்டு வழிகளில் மனிதரைக் கொண்டு செல்கின்றன என்பதை இப்போது காண்கிறேன்.

மனிதர்களின் கால்களைச் சிக்கவைக்கும் துன்பவலை இவற்றினாலே பின்னப்பட்டுள்ளது.

ஆழம்மிக்க குழிகளை இவையே தோண்டிவிடுகின்றன, மனிதர்களை அதற்குள் வீழ்த்துவதற்காக.

ஓ தெய்வீக முதலே! எனக்கு வெளிப்படுத்தியவற்றில் நான் களிப்படைகிறேன்.

புனிதமான உம்மை அடைவதற்கான நெடுஞ்சாலையை எனக்குத் திறந்துவிட்டீர்.

அமைதிக்கான நேரிய வழியை எனக்குக் காட்டி விட்டீர்.

மெய்யான அறிவு நெறியில் எவ்வாறு நடக்க வேண்டும் என்பதை எனக்குக் காட்டிக் கொடுத்து விட்டீர்.

உம்மை நான் பின் தொடர்வேன்.

உமது பொது அறமுறைக் கட்டளைகள் உலகத்திற்கு என்னை கூட்டிச் செல்லும்.

ஆசான் : நான் கூட்டிச் செல்லும் இடமெல்லாம் பின் தொடருபவனே தூய்மை பெறுகிறான்.

உயர்வான விண்ணுலகில் உள்ள இடங்களுக்கும் அவன் ஏறிச் செல்வான்.

பிழையில்லாத தோற்றத்தைப் பற்றிக் கொள்வான்.

எல்லாப் பொருள்களையும் பார்க்கவல்ல உண்மையின் கண்களால் அவன் பார்த்து மகிழ்வான்.

### உள்ளத் தூய்மை

மாணவன் : உமது ஒழுங்கு முறையையும் தூய்மையையும் நான் கடைப்பிடிக்கும் வேளையிலும்,

துறவுக்கான தெய்வீக நெறியில் நடந்து கொண்டிருக்கையிலும் உமது தூய்மையின் அழகை நான் கவனித்துப் பார்ப்பேன்.

அது தெய்வீகமான தூய்மையை வெளிப்படுத்தும்.

மிக உயர்வான உண்மையை நான் அறிய வேண்டும்;

ஓ, ஆசானே! உமது முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே இருப்பேன்.

உம்மை உண்மையாகவே உற்று நோக்குவேன்.

ஆசான் : எவன் சரியான முறையில் துறவு கொள்கிறானோ,

தன்னலமுடைய நெஞ்சத்தைப் பணிவுடன் அகற்றுகிறானோ,

தன்னல இன்பங்களுக்கின்றி விடாமுயற்சியுடன் உண்மையைத் தேடிக் கொண்டிருக்கிறானோ,

அவனே எனக்குத் தனியானவன், எனது தூய்மையைக் கண்டறிபவன்;

அவன் என் நன்றியுடையவன், கட்டாயம் எனது முகத்தைக் காண்பான்.

அவன் என்னால் தெரிவு செய்தவன், இறுதியில் என்னிடமே வந்தடைவான்.

மாணவன் : நீரே எனது புகலிடமும், எனது இருப்பிடமும்,

எனது கண்கள் இறுதியில் உம்மில் ஒன்றித் தங்கிவிடும் என நான் அறிவேன்.

இறுதியில், எனது உள்ளம் உம்முடனேயே தங்கி விடும்.

உயர்வான, தூய்மையான வழியை எனக்குக் காட்டி விடும்.

உண்மைக்கான, கறையற்ற வழியையும் கூடக் காட்டி விடும்.

ஆசான் : உனது தூய்மைக்கும் நேர்மைக்கும் கேடு விளைவித்தவற்றிலிருந்து உன்னைக் கழுவியெடுதது அவற்றிலிருந் விடுதலை பெற நீ அணியமாயுள்ளாய்

ஓர் அழுக்கான ஏனத்தைப்போல் துப்பரவு செய்யப்படு வதற்கு நீ தகுதி பெறறு விட்டாய்;

நீ துப்பரவாக்கப்பட்டதும் உண்மை எனும் தண்ணீரி னால் நீ நிரப்பப்படுவாய்

கீழே தரப்படும் நான்கு பொருண்மைகளால் உனது உள்ளத்தைச் சீராக்கித் தூய்மையாகும்.

இன்பங்களுக்காகத் தீராத ஆசை கொள்ளுதல்,

உலகத்திலுள்ள நிலையற்ற பொருள்களைப் பற்றிக் கொள்ளுதல்,

தன்னலம் கருதுதல்,

தனக்கு உரிமையானவை, தொடர்ந்தும் அவ்விதமே உரிமையாக இருக்க வேண்டும் என்று பேரவாக் கொள் ளுதல்:

கெடுதலை உண்டாக்கும் இந்த நான்கிலிருந்தே ஊற்றெடுக்கின்றன எல்லாத் தீமைகளும் துன்பங்களும்.

உனது உள்ளத்தை நீயே கழுவிக் கொள்.

புலன்களினால் மட்டும் நுகரக் கூடியவற்றில் பேரவாக் கொள்ளுதலை அகற்றி விடு;

உரிமை பெறவேண்டும் என்ற எண்ணத்திலிருந்து மனத்தைப் பிரித்து விடு.

தன்னலத்திற்காக எதிர்ப்பதையும் தன்னலத்திற்கு சிறப்பு அளிப்பதையும் விட்டு விடு.

உனது தனிப்பட்ட, உரிமையானவற்றின் அழியா நிலைக்காக மிக்க ஆசை கொள்ளாதே.

அவ்வாறாக, எல்லா ஆசைகளையும் அழிக்கும்போது, போதுமென்ற மனநிலையை நீ பெறுவாய்.

அழிந்துபோகும் பொருள்களின்மேல் உள்ள ஆசையிலிருந்து உனது மனத்தை விடுவித்ததும், நீ அறிவைப் பெறுவாய்;

தன்னல் எண்ணத்தை விட்டுவிடுவதனால் அமைதியை அடைவாய்;

முடிவில்லா வாழ்விற்கு அவாக்கொள்ளாதிருந்தால், சிதைத்துக் கெடுக்க முடியாததும். அழிவுக்கு உன்னாகாததுமான உண்மையை நீ உணர்வாய்.

ஆசைகளிலிருந்து விடுபட்டவனே தூய்மை பெற்றவன்;

புலன் உணர்வுகளுக்கு அவாக் கொள்ளாதவன்;

அழிந்து போகும் பொருள்களில் மதிப்பு வைக்காதவன்;

செல்வத்திலும் வறுமையிலும் ஒரே நிலையாக இருப்பவன்;

வினை முடிவிலோ வினைகள் (செயல்கள்) கைக்கூடாத நிலையிலோ,

வாழ்விலோ தாழ்விலோ தன் எண்ணங்களை வாழ்வில் கொள்ளாதவன்;

என்றும் நிலைத்திருக்க விரும்பாதவன்;

ஆம்! அவனே எனது தூய்மையான நிலையைப் பெற்றவனாகிறான்.

அவனின் மகிழ்வின்பம் நிலைக்கிறது;

அவனுக்கு ஆறுதல் கிடைப்பது உறுதி;

அவனது அமைதி கெடுவதில்லை;

தூய்மை எதனால் ஆக்கப்பட்டது என்பதை அவன் அறிவான்;

உண்மையின் கறையற்ற தன்மையை அவன் புரிந்து கொள்கிறான்.

மாணவன் : உண்மையைத் துப்பரவு செய்வதுடன் எனது உள்ளத்தையும் துபபரவு செய்வேன்;

நீர் தூய்மையாக இருப்பதைப்போல் நானும் தூய்மையாகவே இருப்பேன்;

இன்ப எண்ணங்களை ஒழித்து விடுவேன்;

அழியும் பொருள்களில் அவாக் கொள்ள மாட்டேன்;

எனது தோற்றத்தைச் சிறப்பில்லாத ஒன்றாகவே கருதுவேன்;

அது என்றும் நிலைக்க வேண்டும் என்ற பேரவாவை ஒழிப்பேன்.

எல்லா மனிதர்களுக்கும் சாக்காடு நேர்கிறது, அதனால் துயரக் கண்ணீர் வழிந்து ஓடுகிறது;

ஆனால், உண்மை என்றும் நிலையானது, அதன் அறிவு அமைதிக்கு வழி காட்டுகிறது.

தன்னலத்தைப் பின் தொடர்ந்தேன், அது நோக்காடு நிரம்பியது;

உலகத்தைப் பின் தொடர்ந்தேன், ஆனால் அது பெரும் அளவு துயரத்தினால் நிரம்பி இருந்தது;

ஆனால் இப்போது உண்மையின் ஆசானே! உம்மையே நான் பின் தொடர்கின்றேன்;

மொழிகளில் கூற முடியாத பேரின்பத்தை அடைவதற்கு என்னை நீர் அழைத்துச் செல்கின்றீர்;

தூய்மைக்கும் அமைதிக்குமான வழியில் காலடி வைப்பதற்கு எனக்குத் திசையைக் காட்டிவிட்டீர்.

ஆசான் : முயற்சியில் தீவிரமாக இரு;

நீ எடுக்கும் முடிவுகளில் துணிவுடன் நில்;

தாங்கிக் கொள்வதில் பொறுமையைக் கடைப்பிடி;

அப்போது, நீ எல்லாப் பழிகளையும் வெற்றி கொள்வாய்;

அதனால் தூய்மை பெற்றவனாகி விடுவாய்;

துன்பமும் தொல்லையும் ஒன்றாகவே குறைய மகிழ்ச்சி, வலிமை, நிறைஅமைதி இவற்றை நீ பெற்று விடுவாய்.

## நேர்மை

ஆசான் : ஒளியின் மகனே! எழுந்து நின்று நேர்மை எனும் உடையை அணிந்து கொள்;

மகிழ்வுற்று இன்பமான இறைவழியில் நுழைந்து விடு;

உனது கண்களைத் திறந்து உண்மையின் புகழை உற்றுப் பார்;

ஏனெனில், நீ உண்மையாகவும் கீழ்ப்படிந்தும் இருக்கிறாய்;

பொறுமையாகவும் துன்பத்தைத் தாங்கியும் உள்ளாய்,

நீ கைப்பற்றி வெற்றியீட்டியும் விட்டாய்.

தன்னலம் என்னும் வல்லமை மிக்க பகைவனை நீ கொன்று விட்டாய்;

அறியாமை என்னும் மிகப் பரந்த இருளைக்கூட நீ கலைத்துள்ளாய்;

பொய்த் தோறறத்தை, மனத்திலிருந்த மிக்க ஆற்றல் வாய்ந்த திரையைக்கூட சுக்கு நூறாகக் கிழித்து எறிந்து விட்டாய்.

அதனால், இனிமேல் அறிவுப் பாதையில் நீ நடந்து செல்லலாம்;

நட்பமைதியில் நீ குடியிருப்பாய்,

அழியாப் புகழ் ஒளியில் நீ திளைத்து விடுவாய்.

உண்மையின் மகனே! எனது தெய்வீக நிலையில் எழுச்சி பெறு!

நேர்மை எனும் ஒளிபரப்பும் வாழ்க்கையை அறிந்து கொள்!

இனிமேல் நீ தன்னலம் அற்றவன், நீ உண்மை யானவன்,

அழிவற்ற, என்றும் நிலைக்கும் வழியிலேயே உனது செயல்கள் அமையும்.

மனித இனத்திற்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கமாகி விடுவாய்.

மாணவன் : ஓ, ஆசிரியரே! இப்போது உமது உண்மை உருவிலே உம்மைக் காண்கின்றேன்;

மொழிகளால் விளக்க முடியாத உமது அழகையும் புகழையும் காண்கிறேன்.

உம்மைக் காணும் இடத்தில் எப்படி இருளால் குடி கொள்ள முடியும்?

துயரமும் துன்பமும் உம்மை எப்படி நெருங்கும்?

உமது பெருமை வாய்ந்த ஆற்றலின் ஒளியால் நான் அதிக வெளிச்சத்தைப் பெற்றுள்ளேன்.

நீரே உண்மை! நீரே நிலையானவர்!

உம்மை எவன் அறிகின்றானோ அவனே உமது ஒளியில் வாழ்பவன்.

ஒளிமயமான செயல்களையே புரிவான், இருளான வற்றையன்று.

ஓ, தலைவனே! நேர்மையான நெறியை எனக்குச் சுட்டிக் காட்டும்;

நிறைவான வாழ்க்கைக்கான மதிப்புமிக்க பொருள் களை எனக்கு வெளியிடுங்கள்.

நிலையானதின் வழியில் செயல்படுவது எவ்வாறு என்பதை எனக்குக் கற்பியுங்கள். அப்போதுதான் அதில் நான் தவறாமலும் விழிப்பாகவும் இருப்பேன்.

ஆசான் : தன்னலச் செயல்களைச் செய்பவனே நேர்மையற்றவன்;

உண்மைச் செய்கைகளைக் கைக் கொள்பவனே நேர்மையானவன்

நேர்மையற்றவன், அவனின் உணர்வுகளினால் அடித்துச் செல்லப்படுகின்றான்;

தேவைகளும் தேவையற்றவையுமே அவனின் ஆண்டைகள்;

ஒரவஞ்சனையும் வெறுப்பும் அவனது கண்களைக் குருடாக்குகின்றன;

ஆசைப்படுதலும் துன்பப்படுதலும்,

அவாக்கொள்தலும் துயர்படுதலும்,

அவனுக்குத் தன்னலத்தை அடக்குவது பற்றித் தெரியாத காரணத்தினால் ஏற்படுபவை.

அதனால் அவன் பெரிதும் ஆறுதல் இன்மையை அடைகின்றான்.

நேர்மையானவனே அவனின் மன நிலைகளுக்குத் தலைவன்.

அவனால் விலக்கப்பட்ட விருப்புகளும் வெறுப்புகளும் அவனுக்குச் சிறுபிள்ளைமையே.

தவறான எண்ணங்களையும் ஒரவஞ்சனை காட்டுவதையும் அவன் ஒதுக்கி வைத்துள்ளான்.

எதையும் விரும்புவதில்லை, அதனால் அவன் துயர்ப் படுவதில்லை;

இன்பம் நுகர்வதற்கு அவன் அவாக் கொள்வதில்லை: அதனால் துயர் அவனை வெற்றி கொள்வதில்லை.

தன்னல அடக்கத்தில் முழுமையானவன், அதனால் உயர்வான அமைதி அவனைப் பற்றிக் கொள்கிறது.

குறை கூறக் கூடாது, தீவிரம் அடையக் கூடாது, பழிவாங்கக் கூடாது;

கொண்டதை விடாமையோ ஒரு சார்பாகவோ இருக்கக் கூடாது;

எல்லாப் பக்கங்களிலும் உமது அமைதியைக் கைக் கொள்ள வேண்டும்.

நேர்மையாகவே இருந்து உண்மையைப் பேசு.

இனிமையுடனும், இரக்கத்துடனும் அறம் செய்;

முடிவில்லாப் பொறுமையில் மூழ்கி விடு.

அன்புடன் இறுகவே பிணைத்துக் கொள். அப்போது உனது செயல்களை அது தக்க முறையில் உருவாக்கும்.

எல்லோரையும் சமமாகவே கருது. யாரும் உன்னைத் தொந்தரவு படுத்தாத வகையில் நடந்து கொள்.

எண்ணுபவனாகவும் அறிவுடையவனாகவும், வலிமை மிக்க இரக்க நெஞ்சம் படைத்தவனாகவும் இரு.

உன்னைப் பற்றிய எண்ணம் மீண்டும் புகுந்து களங்கபடுத்தாதவாறு மிகவும் விழிப்பாக இருந்து கொள்.

உனது தன்னலம் கலைக்கப்பட்டது, அழிக்கப்பட்டது என்று நினைத்துக் கொள்.

நீ செய்யும் எல்லாவற்றிலும் உனது இன்பத்திற்காகவும் வெகுமதிக்குமாகவுமின்றி மற்றவரின் நன்மையையும் உலகின் நன்மையையும் கருத்தில் கொள்.

இனிமேல் நீ மாந்தர்களிடமிருந்து பிரிக்கப்பட்டோ விடுவிக்கப்பட்டோ இருக்க மாட்டாய்;

எல்லோருடனும் நீ ஒருவன்;

இனிமேல் உனக்காக மற்றவர்களுக்கு எதிரிடையாக நிற்காதே.

ஆனால், எல்லோர் மேலும் பரிவும் இரக்கமுங்கொள்;

என்னையும் உனது எதிரியாகக் கருதாதே.

எல்லா மனிதர்களின் நண்பன் நீ.

எல்லோருடனும் இணக்கமாக இரு;

உயிருள்ள எல்லாவற்றின்மேலும் கருணை கொள்;

எல்லையில்லா அறம் உனது மொழிகளையும் செயல்களையும் அழகுபடுத்தட்டும்—

அதுவே உண்மையின் மகிழ்ச்சியான வழி.

அறிவு நிலையாகவுள்ளவருக்கு அதுவே இசைவான செயல்கள்.

சரியான முறையில் செயல்படுபவர் உள்ளத்தில் மகிழ்ச்சி நிரம்புகிறது.

மாற்றம் அடையாததும் மறைந்து போகாததுமான கொள்கைகளுடனேயே அவன் செயல்படுகின்றான்;

தனிப்பட்ட ஆளுமையை விலக்குவதன் மூலம் அவன் ஓர் ஆற்றலாகின்றான்;

அந்த நிலையான பொருளுடன் அவன் ஒருவனாகி ஆறுதல் அற்ற நிலையைத் தாண்டி விடுகின்றான்.

நேர்மையான மாந்தனின் அமைதியே முழுமை யானது.

மாற்றத்தினாலும் நிலையற்றவற்றினாலும் அவனின் அமைதி குழம்புவது இல்லை.

வெறி உணர்ச்சியிலிருந்து விடுபட்டதும் மனம் சமநிலை அடைகிறது.

சலனமற்ற நிலையில் அவன் துயரப்படுவதில்லை.

எல்லாவற்றையும் அவற்றின் உண்மையான உருவு களிலே காண்கிறான்.

அதனால், அவனிடம் தொடர்ந்து குழப்பம் இல்லை.

மாணவன் : ஓ தலைவரே! நேர்மையானவரே! என் னைக் காத்து அருளினீர்!

முழுமையான வாழ்க்கையை எனக்கு வெளிப்படுத்து விட்டீர்;

தெய்வீகமான, ஆனந்தமான வழியை எனக்குக் காட்டிவிட்டீர்;

தன்னலம் ஒழிக்கப்பட்டுவிட்டது; அதனால் நான் உம்மவனாகிவிட்டேன்.

உமது நினைவுகளே என் நினைவுகள.

உமது மொழிகளே என் மொழிகள்.

உமது செயல்களே என் செயல்கள்.

நீரோ என்றும் இருப்பவர், எனது செயல்கள் எல்லாமே உம்மிடமிருந்தே பெறப்படும்.

இழிவுபடுத்தல் என்பது வாழ்வின் காய்ச்சல்.

கலைந்துவிடுவதே மனத்திறகு அதிக இருளை அளிக் கிறது.

திடமின்மையும் ஆறுதலின்மையும் அற்றுப் போய் விட்டன.

தீவினையும் துயரமும் முடிவுற்று, அமைதி என்னும் உறுதியுடன் நிலை கொண்டுள்ளது.

ஆசான் : என்றும் நிலையான ஒளியைக்காண உனது கண்களை நீயே திறந்து கொண்டாய்.

உன்னால் நீ ஏமாற்றப்படுவதோ உன்னாலே நீ அல்லல் படுத்தப்படுவதோ இனிமேல் இருக்காது.

ஓ அன்பனே! தெய்வீக அறிவு என்னும் நெடுஞ்சாலையில் நுழைந்து, அழிந்து போகாமல் என்றும் நிலைக்கும் பேரின்பத்தைப் பெறுவாய்.

## அறமுறை அறிவு

மாணவன் : ஓ ஆசானே! உண்மையான, முழுமையான அறிவை எனக்குக் காட்டுக.

உமது அறமுறையின் செயல்பாட்டை எனக்கு வெளிப்படுத்து.

அறிவு ஒளியால் எனது உள்ளத்தை அணிபெறச் செய்.

ஆசான் : வாழ்க்கையின் பொது அறமுறை மிகச் சரியானதும் முழுமையானதுமே.

அத்துடன் எதுவும் கூட்டவோ அதிலிருந்து குறைக்கவோ முடியாது.

அதில் மாற்றம் செய்யவோ, அதனைச் சீர்திருத்தவோ முடியாது.

எவரும் இதைத் தவிர்க்கவோ அதில் இருந்து தவறவோ முடியாது.

அதன் செயற்பாடுகள் எல்லாமே அறமானவை.

அது நிலையானது, அதனால் மாற்றங்கள் இடையிலும் உறுதியுடன் நிலைக்கிறது.

அதனால், எல்லாமே பாதுகாக்கப்படுகின்ற எவ்வித குழப்பமும் ஏறபடுவதில்லை.

பேரின்பத்திலும் பேராண்மையிலும் நன்மை பாதுகாக்கப்படுகிறது.

தண்டனையாலும் துன்பத்தினாலும் தீமை தூய்மையாகிறது.

அறிவு அமைதியினால் முடிசூடிச் சிறக்கிறது.

அறியாமை, ஆறுதல் இன்மையால் தண்டிக்கப்படுகிறது.

இரு வகையான நடவடிக்கைகளினால் அது செயல்படுகிறது.

அது முடிவற்ற விளைவை உண்டாக்குகிறது.

ஒவ்வொரு சிந்தனையையும் செயலையும் குறித்துக் கொள்கிறது.

ஓ அன்பனே! உயிர்ப்பான தோற்றத்திற்கு நீ பேறு பெற்று விட்டாய்.

இப்போது உலகைப் பார்த்துச் சொல் நீ என்ன காண்கிறாய் என்று.

மாணவன் : ஓ ஆசானே! அறியாமை என அழைக்கப்படும் ஆற்றல்மிக்க இருளைக் காண்கிறேன்.

ஆசையின் தீப்பொறிகள் அனல் கக்கியவாறு பதுங்கி இருப்பதைக் காண்கிறேன்.

அந்தத் தீப்பொறிகள் எப்படிப் பலம் அடைகின்றன என்பதைப் பார்க்கிறேன்.

அவை தழல்கொண்டு எரியும் வெறி உணர்ச்சியாகத் தீவிரம் அடைகின்றன.

அந்த வெறி உணர்ச்சிகளைத் தணிப்பதற்காகவே துயரமெனும் பெரு முகில்கள் எல்லா மாந்த இனத்தின் மேலும் உள்ளன.

ஆசான் : நீ நன்றாகக் கண்டு கொண்டாய்.

திரும்பவும் பார்த்துவிட்டுக் கூறு நீ கண்டவற்றை.

எனது பார்வை துயரத்தை மறைத்திருந்த முகில் திரையை கிழித்துச் சென்றுள்ளது.

எல்லாவற்றிற்கும் மேலாக உண்மையென்னும்பெருமை வாய்ந்த ஒளியைக் காண்கிறேன்;

அங்கே இருளே இல்லை;

எந்த ஆசையும் அந்த இடத்திற்குள் புக முடியாது.

அதனுடன், சுட்டெரிக்கும் வெறி உணர்வுகளும் அங்கே இல்லை;

அங்கே அழுகையும் ஆறுதலின்மையும் இல்லை.

ஆசான் : ஓ அன்பனே! வாழ்க்கையின் அறமுறையை நீ பார்த்துவிட்டாய்;

பொது அறமுறையின் இரட்டிப்பான செயல்களை உணர்ந்து கொண்டாய்.

ஆகையால் ஊட்டிவளர்க்கும் அறியாமை அங்கே உள்ளது;

ஆசையே வேதனை எனும் பசியை உண்டாக்குகிறது;

அதுவே, அப்படி உண்டாக்கியதைக் கொந்தளிப்புடன் பற்றிக் கொள்வது;

அதன் பின்னர், ஆசையுற்ற பொருளிலிருந்து பிரிந்து போதல் நிகழ்வது,

அதுவே துயர்படுதலும் துன்பமும்.

ஆசையிலிருந்து எழுகிறது தற்பெருமை அல்லது தன்னலம்;

அவ்வாறாகவே தன்னைப் பற்றிய ஒரு பொய்த் தோற்றம் உருவாக்குகிறது;

தான் என்ற மாயையில் உள்ளது உலக துன்பத்தின் தீய கனவு.

அதனால் பொது அறமுறைச் சட்டத்தின் செயற்பாட்டினால் மாந்தன் துன்புறுகிறான்;

பொது அறமுறைச் சட்டத்தினால் துன்புறுவதிலிருந்தும் அவனால் தப்பிக்க முடிகிறது.

ஆசை நீக்கப்பட்டதும், மனத்தின் அவலம் மிக்க பசி தீர்க்கப்படுகின்றது.

பொருள்களைப் பறறிக் கொள்கின்ற நெருப்புக் காய்ச்சல் தணிக்கப்படுகின்றது;

அதனால், பிரிவும் துன்பமும் இல்லாமல் போகிறது;

அப்போது, எல்லாவற்றிலும் ஒற்றுமை உண்டாகிறது, அதுவே நிறைவு, பேரின்பம், அமைதி.

ஆசையின்மையில் இருந்து பணிவும் அன்பும் உண்டாகின்றன;

நிலையானதும் வேறானதுமான தனித்தன்மையின் பொய்த் தோற்றம் அழிக்கப்படுகிறது,

அதனால், தன்னைப் பற்றிய பாதுகாப்பு நீக்கப்படுகிறது.

அப்போது, வெறுப்பு, தற்பெருமை, தன்னலம் போன்றவற்றிற்கான ஆணிவேர் வெட்டிவிடப் படுகிறது; அதனால், தூய்மை உண்டாகிறது;

பொருள்களின் மெய்ப்பாடு வெளிப்படுகிறது; உண்மை தெரிகிறது, உண்மையை உணர்த்துகிறோம்.

அதுவே பொது அறமுறை கட்டளை பற்றிய அறிவு; அழியாத்தன்மை பெற்ற பேரின்பம்.

மாணவன்: ஓ உண்மையானவரே! பொது அறமுறைக் கட்டளை மிகவும் எளிதானது,

இருந்தும்கூட, யார் இதனைப் புரிந்து மனத்தில் கொள்கிறார்கள்?

எண்ணிப் பார்ப்பதற்கு மிகவும் அழகானது,

அப்படி இருந்தும் யார் அதனை உற்றுப் பார்க்கிறார்கள்?

நடுநிலைமை வகிப்பதில் குறையற்றது, இருந்தும் யார் அதற்குச் செவி சாய்த்து ஏற்றுக் கொள்கிறார்கள்?

ஆசான்: தூய்மையான உள்ளம் கொண்ட ஒருவன் தான் அதனைக் கற்றுக் கொள்கிறான், உற்றுப் பார்க்கிறான், மனத்தினால் பற்றிக் கொள்கிறான்;

பழியினால் பெறப்படாத செயல்களைக் கொண்டு அவன் வாழ்க்கை நடத்துகிறான்;

அவனின் அறம் எல்லையற்றது; அது உயிர் வாழும் எல்லாவற்றையும் அணைக்கிறது;

தவறு இழைக்காத தோற்றத்தையே அவன் பார்க்கிறான்.

சரியான முழுமையான பொது அறமுறைக் கட்டளையை நன்கு அறிந்து கொள்வதனால் அதனை குறை கூறுவதில்லை;

அவன் அமைதி அடைகிறான்.

மாணவன் : அறிவு எங்கே நெறிப்பட்டு நிறைவாக்கப் படுகிறதோ அங்கே அமைதி உறுதி பெறுகிறது.

அறிவாளியின் அமைதி நிலை மிகப் பெருமை வாய்ந்தது;

தூய்மையானவனின அமைதி மிகவும் ஆழமானது,

உண்மையை அறிந்து உணர்ந்தவர்களின் பேரின்பம் நிறைவுறுகிறது.

மனத்தில் ஏறபட்ட புயல் அமைதி பெறறது,

குழப்ப நிலை மேலும் ஏற்படுவதிலலை.

புயலால் தாக்கப்பட்டவர்களுக்கு இன்ப உலகம் ஒன்று உள்ளது.

புறக்கணிக்கப்பட்டவர்களுககும் காணாமல் போனவர்களுக்கும் உலகம் அதுவே.

இருளிலே அலைந்து திரிபவர்கள் அனைவருக்கும் அதுவே ஒரு புகலிடம.

என்றும் நிலைத்திருப்பவரே! உங்களைக் கண்டு கொண்டேன்!

ஆசான் : நீ தேடிக் கண்டு கொண்டாய்;

நீ போரிட்டு வெற்றி பெற்றுள்ளாய்;

முயற்சி செய்தே பெற்றுள்ளாய்;

நோயை உண்டாக்கியவன் எவனோ அவனே மனிதனின் நோயைத் தீர்ப்பவனாகின்றான்:

சிறுவன் பயிற்சியாளனாகியுள்ளான்.

மாணவன் ஆசிரியனாகிவிட்டான்.

மாணவனும் ஆசானும் ஒருவனே;

நான் எப்படி இருக்கிறேனோ நீயும் அப்படியே இருக்கிறாய்

அமைதியில் என்னுடன் உறுதியாக இரு.

நன்மைக்கான வழிபாடு

இபபோது அமைதி உறுதியுடன் நிலைக்கிறது.

தன்னலம் தகர்க்கப்பட்டுள்ளதனால் மீண்டும் அவா அங்குக் குடியிருப்பதில்லை;

உண்மை பெறப்பட்டுள்ளது; துன்பம் உண்டாக்கி அற்றுப் போய்விட்டது;

வேதனையின் பயணம் முடிவுற்றது,

துன்பமும் இருளும் இனிமேல் நிகழாது;

ஐயமும் அழுகையும் இனிமேல் இல்லை;

ஆறுதல் இன்மையும் துயரமும் மறைந்துவிட்டன.

அன்பு உலகைத் தழுவுகிறது;

துன்பப்பட்டவர்கள் எல்லோர்க்கும் இன்ப அமைதி!

# புனிதச் செயல்கள்

## முதலாவது முற்றுணர்தல்

### விழிப்பு ஊட்டல்

ஒளியின் மைந்தர்களே! நான் உங்களை வணங்குகிறேன்.

காலை நேரப் பிள்ளைகளே! உங்களை நான் வாழ்த்துகிறேன்.

வீணான தூக்கத்தில் உள்ளவர்களைத் தட்டி எழுப்புங்கள், எழுந்திருக்கச் செய்யுங்கள் எழுச்சி பெறத் தூண்டுங்கள்!

காலை வேளையின் வருகையை உங்களுக்கு அறியத் தரும் புதிய நாளின் விடியல். எல்லா உயிரினங்களின் மேலும் விழுகிறது.

பணிவான அந்த அன்பு ஒளி, புனிதமான மலைக்கும்; அமைதியை வெளிப்படுத்தும் நல்ல செய்தித் திரட்டுகளைப் பரப்புகிறது.

இதுவே, காலை நேரத்தின் வீறார்ந்த மேன்மை.

தீமை பள்ளத்தாக்குகளை விட்டு ஓடி மறைகிறது;

தங்கியிருப்பதற்கு இருளுக்கு இடமே இல்லை;

ஏனெனில், எங்கு வெளிச்சம் உண்டோ அங்கு இருளில்லை;

எங்கு நன்மை நிலவுகிறதோ, அங்குத் தீமை கலைந்து விடுகிறது;

எங்கு நட்பமைதி நிலைக்கிறதோ, அங்கு நலிக்கும் சச்சரவு ஒழிக்கப்படுகிறது;

எங்கு அன்பு உள்ளதோ, அங்கு வெறுப்பு அற்றுப் போகிறது;

எங்குத் தூய்மை உள்ளதோ, அங்கு எல்லாத் தீவினைகளும் தோற்கடிக்கப்படுகின்றன.

உண்மையின் உறைவிடத்தை விட்டு எல்லாத் தவறுகளும் தப்பி ஓடிவிடும்.

இதுவே, காலை வேளையின் இனிய மகிழ்ச்சி,

தீமை தோற்கடிக்கப்பட்டு, நன்மை வெற்றியீட்டப்படுகிறது;

உண்மையின் புகழ் வெளிப்படுத்தப்படுகிறது;

தவறற்ற நிறைவான நிலைக்குச் செல்லும் வழி நிறுத்தப்பட்டுள்ளது.

தூய்மையான வாழ்வின் பேரின்பம் பங்கு பற்றுகிறது.

இவற்றினால் காலை வேளை நிறைவு பெறுகிறது—

வெளிச்சத்தினால் இருள் போகிறது.

அறியாமை அறிவினாலும்,

மாயை மெய்ம்மையாலும,

தவறு உண்மையாலும், நீக்கிக் கொள்ளப்படுகின்றன.

காலை வேளையின் மாட்சிமை வெளிப்பட்டுள்ளது;

காலை வேளையின் மகிழ்ச்சி, மனத்தின் உணர்ச்சியினால் பற்றிக் கொள்கிறது;

காலையின் நிறைவு உணரப்படுகிறது;

உங்களில் யார் இதற்காகக் காத்திருந்தீர்களோ, அவர்கள் இப்போது வாருங்கள்!

வந்து, நீங்கள் நிறைவு பெறுவதை உற்றுப் பாருங்கள்:

நட்பமைதி அரசரின் வருகை மலை உச்சி எங்கிலும் அறிவிக்கப்படுகிறது.

துயருற்றுத் தொல்லைபடுபவர்கள் பின்னர் மகிழ்வுறு கிறார்கள்;

மனவருந்தி அழுபவர்கள் மேலே பார்த்து களி கூரு வார்கள்;

அவர்களைக் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டுள்ள சங்கிலி கள் அறுக்கப்பட்டு அவர்கள் விடுவிக்கப்படுவார்கள்;

மாசுபடுத்தப்பட்டவர்கள் துப்புரவுவழி தூய்மையாக்கப் படுவார்கள.

களைப்படைந்து சோர்வுற்றவர்களும் பயணத்தினால் பாதிப்புக்கு உள்ளானவர்களும் ஆறுதல் அடைவார்கள்

நீர் வேட்கையால் தவிப்பவர்களே! வாருங்கள் வந்து பருகுங்கள்;

பசியால் துடிப்பவர்களே, வந்து வயிற்றை நிரப்புங்கள்!

ஏனெனில், அழிவற்ற புனித நீர் காணப்படுகிறது, வாழ்வுக்கான உணவு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

உறங்குபவர்களே! எழுந்திருங்கள்! மாயத் தோற்றங் களைக் கொண்ட கனவுகளைத் தட்டிக் கழியுங்கள்!

அழிவெனும் மயக்கத்திலிருந்து விழித்தெழுங்கள்.

தன்னலத்தின் ஆதிக்கத்திலுள்ள வீணான தூக்கம் இனிமேலில்லை!

ஏனெனில், கருணையின் தலைவன் வெளிப்பட் டுள்ளான்,

நன்மையின் பொது அறமுறைக் கட்டளை விளக்கப்படு கிறது,

கறைபடியாத வாழ்க்கையின் வீறார்ந்த பெருமை, மிகுந்த மெய்ம்மையால் நிறைவு பெற்றுள்ளது!

காலங்களின் உண்மைநிலை தெளிவாக்கப்பட்டுள்ளது;

புனித நெஞ்சமெனும் ஆலயத்தில் அது வெளிக்காட்டப் பட்டுள்ளது.

தூது இல்லாதவர்கள் அதனைத் தெரிந்து கொள் கின்றனர்;

நேர்மையானவர்கள் அதனைக் கேட்கின்றனர்;

தூய்மையானவர்கள் அதனை உணர்கின்றனர்

தீவினையை வெற்றி கொண்டவரில் உண்மை, அதன் எல்லாப் புகழுடனும் தெளிவாககப்படுகிறது.

இருளிலே தேடிக் கொண்டிருக்கும் நீங்கள், இப்பொது வெளிச்சத்திறகு வாருங்கள்!

தீமையின்றியும் துயர் இன்றியும் பார்ப்பவர்களே, என்னுடன் வாருங்கள், அதன் மூல காரணத்தை காண்பிக் கிறேன்.

உங்களது உள்ளத்தின் கமுக்கமான மாளிகை அறைக் குள் நுழைந்து, நீங்கள் காணும் வரை தேடுங்கள்;

நீஙகள் எழுச்சி பெறும்வரை ஆழ்ந்து எண்ணுங்கள.

தன்னலத்தல கனவு காண்பவன் உண்மையில் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருககிறான.

உறஙகுபவன தனவனைப் பறறியோ எழுப்பப்பட்டவர் களையோ அறியமாட்டான;

எழுப்பப்பட்டவன் தன்னையும் கனவு காண்பவனை யும் அறிகிறான்,

அத்தோடு, அது வீணான கனவு என்பதையும் தெரிந்து கொள்கிறான்.

தன்னலத்தில் உறங்குபவன் தீமையுடன் ஈடுபாடு கொள்கிறான்;

இருளினால் சூழ்ந்து கொள்ளப்படுகிறான்;

மிக்க துயரத்தால் சுற்றி வளைக்கப்படுகிறான்;

இதுவே, தூங்கிக் கொண்டிருப்பவனின் நிலைமை,

அவனுக்குள் தீமையின் தொடக்கம், தொடர்ச்சி, முடிவு, எல்லாமே மறைந்திருக்கிறது.

அதனால், உறங்குபவர்களே, எழுங்கள்!

இச்சையெனும் உறக்கத்திலிருந்து எழுங்கள்!

பகை எனும் வீண் கனவிலிருந்து விடுபடுங்கள்!

கவலை தரும் கனவுகளான பேராசை, தன்னலத்திற்கு இடமளித்தல், செருக்கு, தற்பெருமை இவற்றிலிருந்து வெளியே வாருங்கள்!

நம்பிக்கையின்மை எனும் பகல் கனவை உதறித் தள்ளுங்கள்!

தவறுகளாலும் சாக்காட்டைப் பற்றிக் கொண்டிருந்த துயராலும் அடிப்படை இல்லாத நம்பிக்கையினாலும் மயக்கம் கொள்ளாதீர்கள்!

தன்னல உறக்கத்தை முடித்துக் கொண்டு, மெய்ம்மையான உண்மையால் எழுந்திருங்கள்!

தன்னலத்தின் முடிவே உண்மையின் தொடக்கம்.

புகழ்மிக்க உண்மையைக் காணுங்கள்!

நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள், கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள், எழுங்கள்! எழுங்கள்! எழுங்கள்!

உலகை இசையால் நிரப்புங்கள்.

வாருங்கள், வந்து வெளிச்சத்தில் குடியிருங்கள்;

வாருங்கள், வந்து தவறுகளில்லாத நிறைவான நிலைக்குக் கொண்டு செல்லும் நெறியில் காலடி வையுங்கள்;

வாருங்கள்! வந்து மேன்மைமிக்க புனிதத் தன்மையுடன் பெருமைப்பட்டுக் கொண்டிருங்கள்,

அப்போது மேன்மைமிக்க அன்பையும் அமைதியையும் அடைவீர்கள்.

## இரண்டாவது முற்றுணர்தல்

### காப்பவர்

காலங்களின் அறிகுறிகளை ஆழ்ந்து ஆராய்ந்து பாருங்கள்;

போர் சீற்றம் அடைகிறது; மனப்போராட்டங்கள் தீவிரமடைகின்றன;

வெறி உணர்வின் தீப் பிழம்புகள் மண்ணகத்தை அழித்துக் கொண்டிருக்கின்றன;

இனங்களுக்குள் பகை, சமயக் கோட்பாடுகளுக்குள் வேறுமை, வழிமுறைகளுக்குள் முரண்பாடு.

அறிவியல், அதன் வலுவின்மையைக் கண்டுபிடித்திருக்கிறது.

மெய்யியலே (தத்துவமே) மெய்யியலைக் குழப்பம் அடையச் செய்கிறது.

மனம் போன போக்கில் பேசித் தடுமாற்றங்களை ஏற்படுத்துவதெல்லாம் பெர்துவாகி விடுகின்றன.

தவறான கருத்துகளினால் ஏற்படும் மனவேற்றுமைக்கும் வெறி உணர்ச்சிக்கும் இடையிலான அச்சுறுத்தும்

மோதல்கள் போன்றவற்றின் உச்சக்கட்ட தடுமாற்ற நிலையில்,

ஒருவர் இறங்கி வருகின்றார் அன்பு என்ற பெயருடன்

அவருடைய நோக்கமும் குறிக்கோளும் நட்பமைதியே

அவரின் நிறைவு—ஒற்றுமை.

இவற்றின் இடையில் நடந்து வருகின்றார் அவர்;

அவரை மனிதர்கள் அறிவார்கள்; ஆனால், அவர்களின் வலுவின்மையினால் அன்று;

ஆனாலும், அவரின் தொடுகையால் குருடர்கள் கண் பார்வை பெருகிறார்கள்; செவிடர்களால் கேட்க முடிகிறது, நொண்டிகள் நடக்கிறார்கள்.

அமைதியாகவும் புனிதமாகவும் தனிமையான நெஞ்சங்களில் கருணை புரிகிறார்;

அங்கும் இங்குமாகத் தொண்டர்கள், கேட்டுப் பின் தொடர்கின்றனர்.

தொண்டனுக்கு, அவனின் ஆசானையும்—ஆசானுக்கு அவரின் தொண்டனையும் தெரிகிறது.

அவரால் தெரிவு செய்யப்பட்ட ஒரு சிலர் "என்னைத் தொடருங்கள்" என்ற அவரின் கட்டளையைக் கேட்காமல் இருந்ததில்லை.

உண்மையாகவும் உறுதியாகவும் அவரைப்பின்தொடர்ந்துள்ளனர்.

இன்னமைதியே உருவானவரின் திருமுகத்தை அவர்கள் உற்று நோக்கியுள்ளனர்.

முழுமை நிறைந்த அவரின் திருவடிகளில் உட்கார்ந்து கொண்டனர்.

அந்தப் புனிதமானவரின் பணிப்புதலை ஏற்றுக் கொண்டனர்.

அதனால் அமைதி அவர்களுடன் நிலைகொள்கிறது.

மனிதர்களுடன் நடந்து செல்கிறார்கள்; ஆனால் காணப்படுவதில்லை.

உள்ளத்தின் ஆழத்திலுள்ள மனப்போராட்டங்களை யெல்லாம் விட்டு விடுகிறார்கள்.

எவரையும் வெறுப்பதுமில்லை, எவரையும் தாழ்த்திக் கூறுவதுமில்லை.

மன்னிக்கும் அரண் வாயிலை அடைந்துள்ளார்கள்.

நல்லெண்ணமே அவர்களின் ஒவ்வொரு மூச்சும், பேச்சும்;

எல்லையில்லா அறவுணர்வே அவர்தம் எண்ணங்களின் தலைவன்.

வீணான பேரவாவுகளுக்காக அலைவதிலிருந்து விடு பட்டுள்ளார்கள்.

அதிகரித்து வரும் ஆசைகளைத் துரத்தியுள்ளார்கள்.

ஈகத்திற்கான வாயிலைத் தாண்டிச் சென்றுள்ளனர்;

தாங்களாகவே தங்களைப் பணிவெனும் ஆடையைத் தரித்துள்ளனர்.

நன்மைக்கான வழியில் உறுதியுடன் நடந்து செல் கின்றனர்.

அச்சமும், ஐயப்பாடும், அவர்களால் கலைக்கப்பட்டு உள்ளன.

துயரம் என்னும் கொந்தளிக்கும் நீரில் நடந்து செல் கின்றனர்.

அதில் மூழ்குவதில்லை, அவர்களுக்குத் துணை அளிக்கப்படுகிறது.

பிழையான மெய்ம்மையினால் இனிமேல் அவர்கள் திகைக்கவோ குழப்பமடையவோ மாட்டார்கள்.

அவர்கள் கடலையும் பாலைவனத்தையும் கடந்து உண்மை உலகில் நுழைந்துள்ளார்கள்.

உலகின் மீட்சிக்காக மீண்டும் பிறவி எடுத்தவர்கள் இவர்களே;

இருள்படர்ந்த நேரங்களில் வெளிச்சத்தை ஏற்றுக் கொண்டவர்கள்.

தீமை தாண்டவம் ஆடிய நேரத்தில் நன்மையைத் தேர்ந்தெடுத்தவர்கள்;

தன்னலத்திற்காகத் தேடும் நாள்களில் தன்னலக் குரல்கள் பலவற்றை அமைதிப்படுத்தியவர்கள்.

எல்லோருடனும் சேர்ந்து கொள்ளும் இசையுடனான அந்த ஒரே குரலை அவர்கள் பின் தொடர்கின்றனர்.

அதனால், அவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கிறார்கள்.

தீமையைக் கருதாமல் இருப்பதில்லை.

ஏனெனில், அந்த எல்லாம் அறிந்த வல்லவர், தீமையின் விளைவுகளை அவர்களுக்கு எடுத்துக் காட்டியுள்ளார்;

ஆம்! அவர்களாகவே அந்த விளைவுகளை நிறைவு பெறச் செய்துள்ளனர்.

காரணம், அவர்கள் யாரைப் பின் தொடர்ந்தார்களோ அவருடன் ஒன்றாகி விட்டதனால்.

எந்தவித முணுமுணுப்புமின்றி உலகத்திற்கு உரிமை யான எல்லாவற்றையுமே அவர்கள் உலகத்துக்கே வழங்கி விட்டார்கள்.

குழப்ப முகில்கள் அவர்களை இருட்டுவதில்லை.

வெறி உணர்ச்சித் தீச்சுடர்கள் அவர்களைச் சுட்டு எரிப்பதில்லை.

ஆகையால், மகிழ்ச்சியே ஆட்சி புரியட்டும்!

இக் காலங்களிலுள்ள கடும் இருளுடன் பெருமை வாய்ந்த ஒளியும் பரவட்டும்;

துயரத்தின் ஆறுகள் உயரத்திற்கு எழுந்து பாய்ந் தாலும்;

இன்ப மலர்களால் ஆற்றங்கரைகள் நறுமணம் கொள் கின்றன.

மனப்போராட்டம் தீவிரம் அடைந்தாலும், அதன் இடை யில் அமைதி புகுந்துள்ளது.

நானிலத்தைக் குழப்பங்கள் மூடியிருந்தாலும்கூட, ஒற்றுமை வெளிப்படுத்தப்பட்டது;

மிகுதியானவர்கள் பொய்யான கனவுகளைத் தொடர்ந்து கண்டுகொண்டே இருந்தாலும் பெருமைமிக்க மெய் உருவின் தோற்றம், உறக்கம்விட்டு எழுந்தவர்களின் அறிவை மகிழச் செய்துள்ளது.

உறங்குபவர்களே! விழித்தெழுங்கள்! கனவு காண்பவர் களே! நீங்களாகவே எழுந்திருங்கள்!

நீங்கள் எப்போது உங்கள் கண்களைத் திறந்து பார்ப் பீர்கள்?

நிறைவு பெற்றவர் தோற்றமாகியுள்ளார்!

அந்தப் புனிதரின் புரையற்ற மேன்மை வெளிப்படுத்தப் பட்டுள்ளது;

உறக்கமின்றி அவரைக் காத்து நிற்கும் காவலர்கள் அவரைப் புகழ்ந்துள்ளனர்.

அவர்களின் சோர்வை, அவர், தாமே தாங்கிக் கொள்கிறார்.

துயர்படும் நீங்கள், வாருங்கள்! வந்து மகிழுங்கள்!

சோர்வடைபவர்களே! வாருங்கள், வந்து நட்பமைதியைக் காணுங்கள்!

பாடுபட்டு உழைப்பவர்களே! வாருங்கள், வந்து ஆறுதல் அடையுங்கள்!

ஏனெனில், முதியவர்களின் பேரார்வங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

நாங்கள் 'ஆசான்' என அழைக்கும் அவர் தோன்றியுள்ளார்.

அவரே புனித அன்பின் ஆழமான உள்ளம்!

## மூன்றாம் முற்றுணர்வு

### எல்லாம் நிறைந்தவர்

நன்மையைச் செய்துவிட்டு யாருக்கும் வெளியிடாமல் இருப்பது;

அதுவே பணிவு என அழைக்கப்படும்;

ஒருவரால் துன்புறுத்தப்படுபவர்களுக்கு ஆறுதல் அளிப்பது;

அதுவே அன்பு என அழைக்கப்படும்;

ஒருவரின் பகைவரின் நல்லூழில் மகிழ்வது;

அது, தவறில்லா நிறைவான நிலை என அழைக்கப் படும்;

அவ்வாறாகவே எல்லாம் நிறைந்த ஒருவர் என தெளி வாக்கப்படுகிறது.

அதே வகையில் உண்மை அறியப்படுத்தப்பட்டுள்ளது.

எல்லாம் நிறைந்த ஒருவரை அறிந்தவர்கள்குற்றமில்லா முழுமையானவர்கள்;

அவர்கள் தீவினை இல்லாதவர்கள்,

உண்மை எனும் வீட்டில் குடியிருந்து புனிதத் தன்மை என்னும் உடை அணிபவர்கள்.

உற்றுப் பார்! எல்லாம் நிறைந்த ஒருவர் வெளிப்படு கின்றார்;

அவரை வழிபடுபவர்களுக்கு அறிமுகமாகின்றார்;

தீமை எனும் உடை அவர்களிடமிருந்து அவிழ்ந்து போகிறது,

குற்றமற்ற உடையான நன்மையை அணிந்து கொள் கிறார்கள்;

தவறுகள் உள்ள கலயங்கள் உடைக்கப்பட்டு, உண்மை எனும் புதிய கலயங்கள் வாழ்க்கை எனும் கொடிமுந்திரிச் சாற்றினால் நிரப்பப்படுகின்றன.

எல்லாம் நிறைந்த ஒருவர்மேல் நம்பிக்கை உடைய வர்கள் அதனைப் பருகி நிறைவு அடைகிறார்கள்.

அவரின் சொல் கேட்டு செயல்படுகிறவர்களுக்கு நிலையான மகிழ்ச்சி கிடைக்கிறது.

எல்லாம் நிறைந்த ஒருவரை நம்புகிறவர்கள் யார்?

அவரின் சொற்படி செயல்படுபவர்கள் யார்?

நம்பிக்கை வைப்பவனும் செயல்படுபவனும் இந்த உறுதியான அறிகுறிகளால் அறிமுகமாகின்றான்;

அறியாமையிலிருந்து விடுபட்டு விருப்பு வெறுப்புகளுக்கு அடிமைப்படாதிருக்கின்றான்;

வெறுப்பிலிருந்து விடுபட்டு, யாரையும் தண்டிப்பதோ குறை கூறுவதோ இல்லை;

ஓரவஞ்சகம் காட்டுவதிலிருந்து விடுபட்டுச் சண்டை சச்சரவுகளில் ஈடுபடுவதில்லை;

தன்னலத்தை நாடுவதிலிருந்து விடுபட்டுத் தனக்காக எதிர்ப்பதில்லை.

ஒருபோதும் பொறுமை இழப்பதில்லை;

தூய்மை என்னும் ஆடையை அவன் கழற்றுவதில்லை;

அன்பு எனும் தங்குமிடத்திலிருந்து அவன் வெளிச் செல்வதில்லை.

எல்லாம் நிறைந்தவரை அறிந்தவன், அறிவில் முழுமை பெறுகிறான்.

உள்ளம் உரை செயல்—இவற்றில் குற்றம் அற்றவன்.

எல்லாம் நிறைந்தவரைப் பயிற்சியின் மூலமே அடைய முடிகிறது.

அறிவு ஆற்றலினாலே அவரைக் காண முடிகிறது.

பயிற்சி எடுக்கப்பட்ட சரியான முறைகளினாலும் அறிவின் நிறைவாலும் அவரை அறிந்து உணர முடிகிறது.

வேறுபாடுகளான —

நன்மை, தீமை
பகை, அன்பு
தப்பெண்ணம், தவறு
தன்னல விருப்பம், தவிப்பு

வெறி உணர்ச்சி, பரிவிரக்கம்

வாழ்வு, இறப்பு —

இவற்றிற்கு அப்பாற்பட்டவனாக இருக்க வேண்டு மானால்;

எல்லாம் நிறைந்தவரின் முடிவில்லா அமைதிக்குள் நுழைய வேண்டும்;

எல்லாம் நிறைந்தவரின் அழிவற்ற நிலையை உணர வேண்டும்;

எல்லாம் நிறைந்தவராகி விடவேண்டும்;

எல்லாம் நிறைந்தவரே நன்மை தீமைகளுக்கு அப்பாற் பட்ட அந்த தவறில்லாத முழுமை நிலையை உடைய நல்லவர்.

அன்பையும் பகையையும் சமப்படுத்தும் தவறு ஏதுமில்லா நிறைவான அன்பே, அவர்;

வாழ்வாலும் இறப்பாலும் தகர்க்கப்படாத, என்றும் நிலைக்கும் நிலையான வாழ்வே அவர்.

அவரை அறிந்தவன் எவனோ அவனே அவரின் அன்பாகட்டும்.

மாற்றத்தை உண்டாக்கும் எதிர் ஆற்றல்களை அவன் விலக்கிக் கொள்ளட்டும்—

மாற்றம் அடையாத நிலைக்கு அவன் வரும்வரை;

அவ் வகையிலேயே அந்த நிலையான, உறுதிமிக்க யாரையைக் காண முடியும்;

அவரே அருள்பாலிக்கப்பட்ட எல்லாம் வல்லவர், நட்பமைதித் தலைவர்.

எவன் அவரைத் தேட முயலாமல் இருக்கிறானோ அவனால் அவரைப் பார்க்க முடியாது;

எவன் மற்றவர்களுக்கு எதிராகத் தன்னைப் பாது காத்துக்கொள்ள அரண் அமைக்கிறானோ அவனால் பார்க்க முடிவதில்லை;

ஓ! அன்பனே; உன்னில் உள் நோக்கியுள்ள தவறு களை, உன்னில் உள்நோக்கியுள்ள அறியாமையை உன் உள்ளே, தன்னலத்தில் வேர் ஊன்றிய மாயத் தோற்றத்தை அறிந்து உணர்ந்து கொள்;

உணர்ந்ததும், தவறுகளை விலக்கிவிட்டு உண்மையைப் பற்றிக் கொள்;

அறியாமையிலிருந்து தூய்மையான அறிவொளிக்கு விரைந்து செல்.

உன் உள்ளேயுள்ள பகைவர்களை எதிர்த்து நீயாகவே உனக்கு ஒரு பாதுகாப்பு அரணை அமைத்துக் கொள்.

இதே வழியினால்தான் அந்த எல்லாம் நிறைந்தவரை அடைய முடியும்;

வேறு எந்த வழியாலும் அவரை அணுக முடியாது;

எவன் தன்னலத்திற்கான ஆடை எதுவுமின்றி இருக்க விரும்புகிறானோ அவன் வந்து உண்மைக்கான ஆடையை அணிந்து கொள்ளட்டும்;

தங்களுக்காக உயிரைவிட எவன் விரும்புகிறானோ அவன் வந்து உண்மையின் குழந்தையாக மறு பிறவி எடுக் கட்டும்;

எவன் தன்னை வெறுமையாக்கிக் கொள்ள விரும்பு கிறானோ அவன் வந்து எல்லாம் நிறைந்தவர் பற்றிய அறிவால் தன்னை நிரப்பிக் கொள்ளட்டும்.

தன்மையே மிக மிக உயர்வானது,

பணிவே மிக மேன்மையானது;

எல்லாத் துயரங்களையும் தாண்டிச் செல்வது அன்பு —
அமைதி வழியில் எல்லாம் நிறைந்தவரை தேடுப வர்கள், அவரை அடையும் பேற்றைப் பெறுவார்கள்.

## நான்காவது முற்றுணர்வு

### ஆறுதல் இன்மை

மானிடச் சிறுவர்களுக்குத் தூய உள்ளுயிர்ப்பின் குரல்:—

தீவினையினால் அடிமைப் படுத்தப்பட்டது—அதுவே இருள்;

பற்றினால் விடுதலை பெறவுள்ளது—அதுவே ஒளி.

இருள் படர்ந்த இடம் ஒன்று உள்ளது;

மிகுந்த இருளின் இருப்பிடம் அது;

அங்குள்ளவர்கள் ஆறுதலின்மையால் கதறி அழு கிறார்கள்.

அந்த அழுகுரல்கள் தன்னலமுடையவை, அதனால் அவை கேட்பதில்லை.

அவர்களின் கடவுளை அவர்கள் அழைக்கிறார்கள், ஆனால் அமைதி கலைக்கப்படுவதில்லை;

அவர்களுடைய குரலின் எதிரொலியையே அவர்கள் கேட்கிறார்கள், அது அவர்களைப் பயமுறுத்துகிறது.

அதனால், அவர்கள் தங்கள் தீவினைகளின் இடை யிலேயே இருக்கிறார்கள்.

அப்படி இருந்தவாறு, அவர்கள்—

"கோதுமை விதைத்தோம், வெறும் வைக்கோலையே அறுவடை செய்துள்ளோம்;

உழைப்பெடுத்து உழுதோம், ஆனால் அந்த முயற்சிக்கு ஏற்ப பயன் எமக்குக் கிடைக்கவில்லை;

அதனால், அந்தோ! கொடும் வறுமையினால் அல்லல் பட்டுள்ளோம்.

அதிக அளவில் தானியங்களைச் சேமித்து வைத்தோம்;

ஆனால் எலிகள் அவற்றை மிக விரைவாகவே ஒழித்து விட்டன;

பெருந்தொகையான பழங்களை வைத்திருந்தோம், அவை அழுகிப் பாழாகி விட்டன, நீண்ட மாரிக்காலம் வர உள்ளது;

அழிந்து போகவேண்டியவர்கள் நாங்கள், என்றாலும்;

பண்ட மாற்றம் செய்து பெருந்தொகையன பணத்தைச் சேகரித்தோம், ஆனால், கொஞ்சம் கள்வரினால் களவாடப் பட்டது, எஞ்சியவை அச்சுகளாக்கப்பட்டன.

உணவான கோதுமையே இல்லாத நிலையில் எதனை நாங்கள் வாங்க முடியும்?

அப்பமும் இல்லை, அப்பம் விற்பவர்களும் இல்லை;

நாங்கள் சாகிறோம்; எங்களைக் காப்பாற்ற யாருமில்லை" எனக் கதறுகின்றனர்.

திரும்பவும், அவர்களின் கசப்பான நிலையிலிருந்து அவர்கள் கூறுவார்கள்—

"நாம் அதிக அளவில் பாடுபட்டோம், ஆனால் அதற்கான பலன் எமக்குக் கிடைக்கவில்லை;

நாம் கட்டி எழுப்பியவை பாழாக்கப்பட்டுள்ளன.

நாம் பாதுகாத்து உறுதியாக்கியவை வலுவற்று விட்டன.

வியப்புக்குரிய எமது செயல்கள் எல்லாம் நொறுக்கப் பட்டுள்ளன.

நாம் உண்டோம், உறங்கினோம், இப்போது உளச்சல் பட்டுள்ளோம்.

நாம் ஈகங்கள் செய்தோம்; இருந்தும் கைவிடப்பட்டுள் ளோம்.

நாமாகவே அழகான மாளிகைகளைக் கட்டினோம், அவற்றில் தங்குவதில்லை.

நமது துயரங்கள் ஆழம் மிக்க கடல்களைப் போன் றவை;

நமது துன்பங்கள் பெரும் மலைகள் போன்றன.

நமது மனவருத்தங்களோ மிகுதியானவை, நமது நலிவோ மிகக் கடுமையானது.

நமது நோய்களுக்கு மருந்தே இல்லை.

நமது துன்பங்களுக்குத் தீர்வே இல்லை.

நாம் சோர்வுற்றுள்ளோம், அதனால் ஆறுதல் இல்லை!"

இவ்வாறாகவே அவர்கள் ஓலமிட்டுக் கதறி அழுதும்,

அவர்களின் அந்த அழுகுரல் கேட்கப்படுவதில்லை.

அவர்கள் வெளியிட்டபடி, அவர்களின் துன்பத்தை நுகர்நது கொண்டிருக்கிறார்கள்; அதிலிருந்து விடுதலை கிடைப்பதில்லை;

அவர்கள் ஆறுதலுக்கு அலைந்தாலும், அது அவர் களுக்கு எட்டாது;

ஏனெனில், இருள் படர்ந்த இடத்திலும்,

இருள்மிக்க குடியிருப்புகளிலும், அவர்களுக்குத் தீர்வு மில்லை.

போக்கும் இல்லை,

இரட்சிப்பும் இல்லை.

எங்கே தன்னலம் ஆதிக்கம் புரிகிறதோ அங்கே அமைதி இல்லை.

தூய்மை அற்ற வழியில் செல்லும் நீங்கள்,

தன்னலத்தின் குடிமக்களாக இருக்கும் நீங்கள்,

விலகிக் கொள்ள முடியாவிட்டாலும், செவிசாயுங்கள்.

கேளுங்கள் அந்த முன்காணியின் வாய் மொழிகளை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டிய காலம் வரும்.

தீயினால் சுடப்பட்ட குறிபோல அவரின் சொற்கள் நெஞ்சத்தில் தீக்குறிப்பட்டுள்ளன.

இருள்மிக்க இரவு உங்களைத் தாக்கும்போது;

உணவு வறுமையைவிட அதிக பசி வாட்டும்போது,

இறப்பைவிடக் கூடுதலான இழப்பு ஏற்படும்போது,

அன்பானது வதைக்கப்பட்டு சிலுவையில் அறையப் பட்டு பகை விடுவிக்கப்படும்போது, அமைதி அகற்றப் பட்டுப் பகைமை புகழப்படும்.

நேர்மை இகழப்பட்டுக் குழப்பம் கொந்தளிக்கும்போது;

அந்த முன்காணியின் குரல் இனிமேல் கேட்காது;

அந்த நேரத்தில் மட்டும் நீங்கள் வந்து அழும்போது, அந்த அழுகுரல் கேட்காது.

துன்பத்தால் இன்னலை நுகர்பவர்கள் தீர்வு பெறு வதில்லை.

மனத் துயரத்தால் அல்லல்படுபவர்களுக்கு ஆறுதல் கிடைப்பதில்லை;

இதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்—

காலையில் முன்னதாகவே உறக்கத்திலிருந்து விழித்து எழுபவனே செங்கதிர் தோற்றத்தைக் காண்கிறான்.

ஊக்கத்துடன் காத்திருந்து விளக்கை எடுத்துச் செல்பவனே இருளில் வழியைக் காண்கிறான்.

குற்றமற்ற நெஞ்சத்துடன் இருந்து, பாடுபட்டு உழைப்பவனே நட்பமைதியின் பொன்முடி சூடப்படுகிறான்.

## ஐந்தாவது முற்றுணர்வு

### மாற்றங்களின் இடைவெளி

துயர்படும் சிறார்களுக்குப் புனித ஆவியின் வாய்மொழிகள்:

விழித்தெழுங்கள்!

உங்கள் கண்களைத் திறந்து பாருங்கள்!

நோக்காடு மிக்க உறக்கத்தில் எதற்காக மூழ்கியிருக்கிறீர்கள்?

ஆறுதல் அற்ற இரவிலிருந்து வெளியே வாருங்கள்,

தீவினையும் பெரும் துயரும்மிக்க இருள்படர்ந்த தீய கனவுகளிலிருந்து வெளியே வாருங்கள்!

ஏனெனில் இருள்படர்ந்த இடத்திலிருந்து வெளியேறுவதற்கு ஒரு வழி இருக்கிறது,

இருள் குடி கொண்டிருக்கும் வீட்டைவிட்டு வெளிவருவதற்கு உறுதியான வழி ஒன்று உள்ளது.

எவன், மிக்க உறுதியுடன் தன்னலத்தைப் போக்கி, உண்மையையே தனது கடவுள் எனக் கடைப்பிடிக்கிறானோ அவனுக்கு, அங்கே—

வெளிச்சமும் பாதுகாப்பும்,

ஆறுதலும் குணப்படுத்தலும்,

நிறைவும் மகிழ்ச்சியும் காத்திருக்கும்.

எழுச்சி அடைந்தவன் மேலும் கனவுகள் காண மாட்டான்.

அவ்வாறு உறுதியுடன் மாற்றம் பெறும்போது—

அவனுடைய வலப் பக்கத்திலே இருளான நுழை வாயிலும்,

இடப் பக்கத்திலே பார்ப்பதற்கு அழகான கோட்டை வாயிலும் தோன்றும்;

இருளான அந்த நுழைவாயினுள் குனிந்து வணங்கிப் புகுவான், அப்போது—

மிக்க மனக்கவலை உண்டுபண்ணக்கூடிய ஏளனங்கள், பழிப்புகள், நகைப்புகள் எல்லாம் அவனைப் பின் தொடரும்,

அந்த வாயிலைத் தாண்டும்போது, இரு வாள்களை வெளியே எடுப்பான்.

முதலாவது—'தேடுதல் வாள்' எனவும்

இரண்டாவது—'கூறு படுத்தும் வாள்' எனவும் அழைக்கப்படும்.

தேடுதல் வாளினால் அறிவின் பகைவர்களை அழிப்பான்;

கூறுபடுத்தும் வாளினால், தீமையிலிருந்து நன்மையை வெட்டி எடுப்பான்.

வெளிச்சத்தின் பகைவர்கள் எல்லோரையும் அவன் எதிர் கொள்வான்;

பெருமைமிக்க அந்த நிழலுக்குக் கல்லை வீசித் தாக்கு பவர்களை அவன் துரத்தி ஒழிப்பான்,

அளறி (நரகத்தி)ன் திறப்பு (சாவி)களை வைத்திருக்கும் வலம்மிக்க காவலர்களைத் தோற்கடித்து விரட்டுவான்.

துன்பப் படல் என்னும் தீயினூடாகச் செல்லும்போது அத் தீயினால் அவன் பொசுங்க மாட்டான்;

மனத்துயர் என்னும் இருள்மிக்க பேராழியைக் கடக்கும் போது, அது அவனை விழுங்கிவிடாது;

குறிக்கோள் என்னும் பெருமை வாய்ந்த காட்டினை வந்து அடைந்ததும் அவன் திரும்பவே மாட்டான்.

அவனைப் பற்றியிருந்த எல்லாவித இருள்களிலிருந்தும் அவன் வெளி வருவான்;

அப்போது, நிழல் அற்ற ஒளியைக் காண்பான்.

அந்த வலிமைமிக்க இருளின் வெகு தொலைவில் உள்ள விளிம்பில் அவனால் ஒரு குரலைக் கேட்க முடியும்.

அதுவே, புனிதமான ஒருவரின் குரல்.

அப்பொழுது—

உண்மைக்கு அரசர் அண்மையில் உள்ளார் என்பதையும்;

முடிசூட்டப்பட்ட நட்பமைதி இளவரசர் அங்கே வருவதையும் காண்பான்.

அந்தக் குரல் மென்மையாகவும் உண்மையாகவும் இருப்பதனால், அதனையே அவன் பின் தொடர்வான்,

அது அவனை, ஒளியின் நிலையான இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லும்;

அங்கே ஒவ்வொரு திரையும் விலக்கப்பட்டு ஒவ்வொரு புதிரான கமுக்கம் விளங்கப்பட்டுத் தீர்த்து வைக்கப்படும்.

அப்போது உண்மைக்குத் தலைவனாக உள்ளவரின் மேன்மையை அறிந்து உணர்வான்;

நேர்மையின் பொது அறமுறைக் கட்டளையின் அழகைக் காண்பான்;

பெருமைமிக்க மெய்மையின் புகழை உற்று நோக்கிக் காண்பான்;

அருளுக்கு ஆட்பட்டவர்களின் பாடலைக் கேட்பான்;

தீர்வு பெற்றவர்களின் இனிமையான பாடல்—

பாவம் ஒழிக்கப்பட்டது,

பொது அறமுறைக் கட்டளை எவ்வளவு குற்றம் குறையில்லா நிறைவானது!

துயரம் தொலைந்தது;

எவ்வளவு மேன்மை மிக்கது அன்பு!

துன்புறுத்தும் முகில்கள் கலைந்து ஒழிந்தன.

எவ்வளவு பெரும் சிறப்பானது அந்தப் பேரொளி!

தவறுகள் வீழ்ச்சியுற்றன,

எவ்வளவு மாசிலாப் பெருமை வாய்ந்தது உண்மை!

உறங்குபவர்களே, விழித்தெழுங்கள்!

வீழ்ச்சி அடைபவர்களே, மேலே பாருங்கள்!

அந்த ஒளியில் களி கூருங்கள்!

மேன்மைமிக்கவர்கள் வந்து பருகட்டும்;

பசித்தவர்கள் வந்து உண்ணட்டும்;

இறப்பின் பிடியில் உள்ளவர்கள் வந்து உயிர் வாழட்டும்;

விடுதலை இன்பம் நிறைகிறது, மீட்சி உறுதியானது.

அமைதியின் வாயிலில் புகுபவனுக்கு இவ் உலகப் பேராசுகளெல்லாம் தூசாகவே இருக்கும்;

அவற்றின் புகழ், கலைந்துபோகும் முகிலைப் போன்றிருக்கும்;

அவற்றினால் ஏற்படும் இன்பங்கள் தூற்றப்படும் உமியைப் போன்றவை;

அவனுக்கு அந்தப் புனிதமானவரின் குரல் கேட்கும்:—

"தன்னலத்தை வெற்றி கொண்டவனே

தீவினையும் துயரத்தையும் வெட்டி வீழ்த்தியவனே,

நிழல்களையும் பொய்த் தோற்றங்களையும் கலைய வைத்தவனே,

தேடுதல் வாளை வீசி விடு,

கூறுபடுத்தும் வாளை உறையில் போடு;

இங்கே துயரங்கள் இல்லை—வேதனையும் இருளும் இல்லை;

முரண்பாடும் பாகுபாடும் இங்கே நுழையக் கூடாது.

நேர்மையைப் பணிவுடன் கடைப்பிடிக்கும் நீ எனது நீதிமுறைக் கட்டளையைக் கண்டு கொண்டாய்.

உண்மையை அமைதியாகத் தேடுபவனான நீ எனது இன்னமைதியைக் கண்டு கொண்டாய்;

அன்புறவையும் நல்லதையும் விரும்பும் நீ என்னைக் கண்டு கொண்டாய்;

உனது வீட்டை எனது நிலையான இருப்பிடத்திற்கு மாற்றிவிடு,

உனது போராட்டம் முடிவுற்றது, நீ ஆறுதல் பெற்று விட்டாய்.

## ஆறாவது முற்றுணர்தல்

### இன்னமைதி

உண்மையின் குழந்தைகளுக்குப் புனித ஆவியின் குரல்—

களி கூருங்கள், மகிழ்ந்திருங்கள்!

ஆம்! மகிழ்ச்சி உங்களில் நிரம்பட்டும்!

ஏனெனில், பெருமை மிக்க கடமை நிறைவேற்றப் பட்டது;

அதனால், மேலும் முயற்சி செய்வதற்கு இல்லை;

மிக நீண்ட பயணம் முடிவுற்றது,

அதனால் மேலும் களைப்பு அடைய வேண்டிய தில்லை;

நாள்கள் எண்ணப்படுகின்றன, மீட்பர் வரவு தந் துள்ளார்.

மலைகளில் அமைதி நிலவுகிறது, பள்ளத்தாக்குகளில் மகிழ்ச்சியின் ஆரவாரம் நிகழ்கிறது,

ஏனெனில், அன்பாகவும் அறிவாகவும் உள்ள குழந்தை பற்றிக் கொள்ளப்படுகின்றான்;

நல் எண்ணமும் நட்பமைதியும் நிறைந்த பேரரசே உறுதிசெய்யப் படுத்தப்பட்டுள்ளது.

புனிதமானவர்களே, பாடுங்கள்!

தூய்மையானவர்களும் அமைதியானவர்களுமான உங்களின் குரல்கள் கேட்கப்படட்டும்!

உண்மை நிலை நாட்டப்பட்டது, நேர்மை ஆட்சி புரி கிறது.

ஒவ்வொரு துயருக்கும் மகிழ்ச்சி உண்டு,

அதுவே காயப்பட்ட ஒவ்வொரு புண்ணையும் குணப் படுத்தும் எண்ணெய்.

உடைந்துபோன ஒவ்வொரு உள்ளத்திற்கும் ஆறுதல் உண்டு.

சோர்வடைந்தவருக்கு ஆறுதல் நீடித்திருக்கும்;

அலைந்து கொண்டிருப்பவர்க்கு நிலையான தஞ்சம்.

நம்பிக்கை அற்றவர்களுக்கும் சூறாவளியால்—

தூக்கி எறியப்பட்டவர்க்கும் பெருமகிழ்ச்சி அளிக்கும் பாதுகாப்பான இடம்,

ஏனெனில், உள்ளத்தின் தீவினையற்ற தன்மை அங்கு நிலவுகிறது.

தன்னலம் என்னும் இருள் படர்ந்த இடங்களிலிருந்து மாற்றம் அடையும்போது ஏற்படும் இடைநிலையான திட மற்ற பள்ளத் தாக்குகளுக்கு அப்பால்,

புனிதத் தன்மைக்கான அமைதிப் பாதை காணப் படு கிறது.

தூய்மையின் உயரமான மலைமுகடுகளிலும்,

நேர்மை எனும் மலைகளின் மேலும்—

அன்பின் மேன்மையான மலைக்குன்றுகளின் மீதும் கூட—

நிலையான உறுதியான அமைதி நிலவுகிறது.

அங்கே, எப்போதும் நிலைத்திருக்கும் ஆறுதல் காத் திருக்கிறது.

எவனால் ஏறிச் செல்ல முடியுமோ, அவன் வந்து பார்க் கட்டும்;

எவன் முயல்கிறானோ, அவன் வந்து அறிந்து கொள்ளட்டும்;

எவனால் வெற்றி பெற முடியுமோ, அவன் வந்து உள்ளே நுழையட்டும்.

இருள் கலைந்து ஒழிந்தது;

தீமையின் ஆற்றல் அழிந்தது;

விதியின் சகடம் தகர்க்கப்பட்டது;

அழியாப் புகழுடன் ஒளி நிலை கொள்கிறது;

நன்மையின் ஆற்றல் மிக்க உயர்வானது;

நேர்மையும், அன்பும், பிணைக்கப்பட்ட ஒவ்வொரு கட்டையும் உடைத்து விடுகின்றன.

இறப்பு வெட்டி வீழ்த்தப்பட்டது, வாழ்வு அறியப் பட்டது,

அழியாமை அறிந்து உணரப்பட்டதால், ஐயம் இனி மேல் இடம் பெறாது;

குற்றமற்றதும் முழுமையானதுமான அன்பு வெளிப் படுவதனால் அச்சம் தூக்கி எறியப்படுகிறது

உண்மைக்கு அரசர் அண்மையில் உள்ளார்;

அவரே, தவறற்ற நிறைவுற்ற அறிவு;

வாழ்க்கையின் தலைவர் கைக்கு எட்டியுள்ளார், அவரே நிறைவான தூய்மை;

அந்த மீட்பர் இங்கே இருக்கிறார், அவரே குற்றமில்லா நிறைவான அன்பு;

அதனால் அமைதி நிலைகொண்டுள்ளது உறுதியுடன்—

ஆம்! அதுவே என்றென்றும் நிலைத்திருப்பது.

நேர்மையானவர்க்கே இவையெல்லாம் அறிய வைக்கப் படுகின்றன;

அவற்றின் புகழ், அறிவுள்ளவர்க்கே வெளிப்படுத்தப் படுகிறது,

மேலும், சூதுவாது இல்லாதவர்களினால் மட்டுமே மூன்றுவிதமான தவறில்லா நிறைவான நிலைகளை ஏற்றுக்கொள்ள முடிகிறது;

ஏனெனில், புனிதமற்றவனால் புனிதமில்லாதவற்றை அறிய முடிகிறது;

புனிதமானவனால் புனிதமானவற்றை அறிய முடிகிறது.

குற்றமில்லாத நிறைவான நிலை உருக்கெடுவதில்லை—

அதன் அழகை கவனித்துப் பார்!

நேர்மை தகர்க்கப்படமாட்டாது—

அதன் அமைப்பின் அளவுகளில் குறையே இல்லை!

உண்மை குழப்பப்படாமல் இருந்து வருகிறது;

அதன் அமைதியான நிலைக்கு ஈடுஇணையே இல்லை!

அதனால்தான் அங்குப் பெரு மகிழ்ச்சி உண்டாகிறது.

அதனால் அங்கு முடிவில்லா முன்னமைதி நிலைக்கிறது.

## வணக்குவிப்பு—1

### தூய்மை

கறையில்லாத் தூய்மைக்கு நான் மாந்தர்களை வணக்குகின்றேன்,

உயர்வுமிக்க தூய்மையை வெளிச்சத்தின் புதல்வர்களுக்குச் சுட்டிக் காட்டுகின்றேன்.

தூய்மைக்கான மிகச் சிறந்த பாதையில் செல்வதற்குத் தவறும் பிள்ளைகளுக்கு வணக்கம் அளிக்கிறேன்.

ஏனெனில் தூய்மையிலிருந்து பிறக்கிறது உண்மை,

அத்துடன், அதனைத் தேடிச் செல்பவர்கள் அளப்பரிய சிறப்பு வாய்ந்த வெளிச்சத்தையும் தேடுகிறார்கள்.

விடுதலைக்கான வழி திறக்கப்பட்டிருப்பதனால்,

கட்டுப்பட்டிருக்கும் நீ இப்போது வந்து விடுதலை பெறு,

அடிமையாக்கப்பட்டுள்ள நீ 'உதவியற்றவன் நான்' எனச் சொல்லாதே,

ஆம்! இரட்சிப்பு உன் கதவைத் தட்டுகிறது.

நீ விடுதலையைத் தேர்ந்து எடுப்பாயா?

அல்லது, அதிலும் பார்க்க கட்டுப்பட்டு இருப்பதையே விரும்புவாயா?

தூய்மையில் வாழ்வுரிமை உண்டு,

அவளின் ஆலயத்திலே புரிந்து கொள்ளும் தன்மை குடி கொண்டிருக்கிறது,

களிப்பும் மகிழ்ச்சியும் அமைதியும் வாயில்காப்பவர்களாக உள்ளனர்.

வா, வந்து உண்மைக்கு ஊக்கம் அளித்து பேசுவதைக் கேள்!

அதன் பிறகு, தூய்மையானதைச் செய்.

அப்படியே, தூய்மையானவற்றைச் செய்யும்போது மிக உயர்வான பேரின்பத்தை அறிவாய்.

உனக்குச் செயல்களில் மட்டும் தூய்மையைக் காண முடியாது,

மிக உயர்வான தூய்மை செயல்களில் மட்டுமே அடங்கி இருப்பதில்லை.

உனது செயல்களை வெட்டிக் குறைப்பதனால் நீ தூய்மையாக முடியாது.

ஆனால், அவ்வாறான செயல்களுக்கு மூல காரணங்களாக இருப்பவற்றையும், உனது மனத்தையும் நெஞ்சத்தையும் துப்பரவாக்குவதன் மூலமே நீ தூய்மையானவன் ஆகிறாய்.

ஏனெனில், தூய்மையான மனம், தூய்மையற்ற செயல்களைப் புரியாது.

அதேபோல், கறையில்லாத நெஞ்சம் அன்பில்லாதவற்றை நாடுவது இல்லை.

அப்படியானால், அழுக்கடைதல் என்பதும் அதனைத் தூய்மையாக்குவது என்பதும் என்ன?

தூய்மையில்லாத சிந்தனை,

மாசுள்ள ஆசை,

தன்னலச் சார்பு,

இவை உள்ளத்தைக் கெடுத்து, இருளையும் இறைப்பையும் கொண்டு வருபவை.

தூய்மையான சிந்தனை,

புனிதமான ஆசை,

தன்னலம் அற்ற அன்பு,

இவை உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, வெளிச்சத்தையும் நல்வாழ்வையும் கொடுக்கின்றன.

அப்படியானால், வாருங்கள்! தூய்மைக்கான அந்த குறுகிய வழி எவ்வளவு நேராகவுள்ளது என்பதை வந்து பாருங்கள்!

வாருங்கள், உண்மை வீற்றிருக்கும் அழகிய அரண்மனை, மறைபுதிர் ஏதுமின்றி எப்படி வெளிப்படையாகவே திறந்து காணப்படுகிறது என்பதை வந்து அறியுங்கள்!

வாருங்கள், நேர்மைக்கான பொது அறக் கட்டளைகள் எவ்வளவு இலகுவானவையாகவும் மிகச் சிறந்தானவாகவும் உள்ளன என்பது பற்றி விளக்கம் பெறுங்கள்!

தூய்மையின் வழியைக் காண்பது எளிதானது அவ் வழியில் செல்வது மகிழ்ச்சி தரக்கூடியது:

உண்மையின் வாயில்கள் முற்றும் திறக்கப்பட்டு நுழைவு வழி வரவேற்றுக் கொண்டிருக்கிறது;

நேர்மையின் அறக்கட்டளைகள் கைக்கு எட்டும் நிலையிலும், அவற்றை அலசி ஆராய்வதற்கு ஆயத்தமான நிலையிலும உள்ளன.

வெறுக்கத்தக்க சிந்தனைகளுக்கு இடம் அளிப்பது,

இச்சைகளை நாடுவதை மனத்தில் போற்றி மகிழ்வு அளிப்பது,

நெஞ்சத்தில் தீய எண்ணங்களுக்கான விதைகளை நட்டு வளர்ப்பது—

இவை எல்லாம் கெடுதலை உண்டாக்கித் துயரப்படுவதற்கு வழி வகுக்கும்.

இன்பங்களுக்காகவும் வெகுமதிகளுக்காகவும் வேட்கை கொள்ளுதல்,

மற்றவர்களின் தீவினைகளில் வாழ்க்கை நடத்துதல்,

'இந்த மனிதனைவிட நானே சிறந்தவன்' என நினைப்பதெல்லாம்;

உன்னைத் தூய்மை அற்றவனாகி, உண்மையிலிருந்து விடுபட்டு அலைய வைக்கும்.

மற்றவர்களைப் பற்றிச் சிந்திக்காமல் உன் நலத்தையே நாடுவது,

மற்றவர்களைக் குறைவாகவும் உன்னுடைய சொந்த செயல்பாடுகளையே உயர்வாக நினைப்பது,

பெருந்தன்மையுடன் உனது நெஞ்சத்தை மிகக் கடினமானதாகவும் பிடிவாதம் உள்ளதாகவும் ஆக்குதல்—

இவை உனது உள்ளுயிரில் கறையை உண்டாக்கி அமைதியிலிருந்து எங்கோ இழுத்துச் சென்று விடும்.

தூய்மைக்கான வழி எவ்வளவு பெரும் புகழுடையது என்பதை நன்கு கவனித்துப் பார்;

உண்மை எனும் கருவூலம் எவ்வளவு வனப்பு நிறைந்தது!

புனிதத் தன்மை எனும் ஆடை எவ்வளவு அழகானது மகிழ்ச்சியை அளிப்பது!

பகை, இச்சை, தீய எண்ணம்—இவற்றிலிருந்து விடுதலை பெறுவது எவ்வளவு இனிமை, எவ்வளவு மகிழ்ச்சி!

இன்பங்களுக்கும் வெகுமதிகளுக்கும் ஆசையற்று இருப்பது எவ்வளவு நன்மை, எவ்வளவு களிப்பு!

மற்றவர்களிடம் உள்ள தீமைகளைப் பெரிதுபடுத்தாமல் இருப்பது எவ்வளவு சிறப்பானது, மகிழ்ச்சிகரமானது!

நான் எனும் தற்பெருமையை அடியோடு அகற்று; விளைவு எவ்வளவு சிறப்பு! எத்தகைய அமைதி!

தூய்மையான உள்ளத்தினால் உண்டாகும் பேரின்பம் எண்ணிப் பார்ப்பதற்கே அப்பாற்பட்டது;

தீமையில்லாத மனத்தின வனப்பு ஒப்பிட்டுப் பார்க்கவே முடியாத அளவிலானது;

என்றும் நிலைத்திருக்கும் நேர்மையே மேன்மை மிக்க பேரின்பம்!

நட்பமைதியை ஏற்படுத்துவதே உயர்வான தூய்மைக்

கறைபடியா வாழ்க்கையே களிப்பை உண்டாக்கும்.

தீமை இல்லாத நெஞ்சயமே சீரறிவு மிக்கது,

உங்களில்—

தீவினையால் தாக்கப்பட்டு கறை படிந்தவர்கள் எவரோ;

என்றும் நிலைத்திருக்கும் அமைதியை எவர் தேடிச் செல்கின்றனரோ;

அவர்கள் வாருங்கள், தூய்மைக் கதவைத் தாண்டி உள்ளே செல்லுங்கள், புனிதத் தன்மையே தோழன் ஆகட்டும்.

சிந்தனைகளைத் தூய்மையாக்குங்கள்;

உங்களது மனம் என்னும் உடைகளை வெண்மையாக வெளுத்துக் கொள்ளுங்கள்;

உங்கள் நெஞ்சத்தில் உள்ள கமுக்கமான இடங்களைத் துப்புரவு படுத்துங்கள்;

அது முடிவுற்றதும், உண்மை வந்து உங்களுடன் குடியிருக்கும்;

அறிவே உமது விளக்கமாகவும் அறிவே உமது வழி காட்டியாகவும் இருக்கும்;

நேர்மை என்றென்றும் நிலைத்திருக்கும் உமது பாது காப்பாகவும்கூட;

ஒளியும், மகிழ்ச்சியும், அமைதியும் என்றும் உம்மையே பின்பற்றிக் கொள்ளும்.

## ஊக்குவிப்பு—2

### பணிவுடைமை

குற்றமில்லாப் பணிவிற்கே மாந்தர்களை நான் ஊக்குவிக்கின்றேன்.

பணிவிற்கான சிறப்பு வாய்ந்ததும், அன்புறவை ஊட்டுவதுமான நடைவழியை அவர்களுக்குக் காட்டுகின்றேன்.

பணிவின்றி யாரால் உண்மையைக் காண முடியும்?

அடக்கவொடுக்கம் இல்லாமல் எவரால் அந்த எல்லாம் ஒன்றானவரை நன்கு புரிந்து மனத்தினால் பற்றிக் கொள்ள முடியும்?

தாழ்வில்லாமல் எவரால் அந்தப் பெருமை மிக்க மெய்மையைக் காண முடியும்?

பணிவுடன் அன்பும் ஒத்து வாழ்கிறது;

அறிவும் அவற்றுடன் நிலை கொள்கிறது.

தாழ்மையான நெஞ்சத்துடன் அமைதி தங்கி இருக்கிறது.

உனது தற்செருக்கைப் போக்கிவிடு,

உனது உயர்வை மேலும் நினைவில் கொள்ளாதே,

உனது மனத்தில் உள்ள தற்பெருமைகளை விலக்கி விடு;

அப்போதுதான் உண்மை உன்னை மேன்மையாக்கும்.

ஆணவத்தைவிட்டு உண்மை விலக்கிச் செல்கிறது;

நான் என்னும தற்பெருமையிலிருந்து அறிவுடமை அகன்று விடுகிறது;

புனிதத் தன்மையும் ஆணவமும் ஒன்றாகவே தங்கியிருப்பதில்லை.

பணிவிலிருந்து வெளிப்படுகிறது வெளிச்சம்,

ஆனால், இருளானது ஆணவத்துடனும் தற்பெருமையுடனும் குடியிருக்கிறது.

ஓ, மாந்தனே! எதனால் நீ பெருமை அடைகின்றாய்?

அழகிலா? அங்கே காத்திருக்கிறது கட்டழிவு.

உனது உடைகளிலா?

அவற்றை பூச்சியும் புழுதியும் அழித்துவிடும்.

உனது உடைமைகளினாலா?

நாளை, மற்றொருவருக்கு அவை உரிமையாகலாம்.

உனது தனித் திறமையினாலா?

அதன் பளபளப்பு மங்கிவிடும்.

உனது புகழினாலா?

அது பனி போல் மறைந்துவிடும்.

உனது படிப்பினாலா?

அது இப்போதுகூட எல்லையைத் தாண்டி விடுகிறது.

உனது செயல்களினாலா?

அது என்றுமே மறைந்துவிடும்.

அப்படி இவை எல்லாமே ஒன்றுமில்லாமல் போய்விடும் போது, எஞ்சி இருப்பவை யாவை?

மெய்யறிவும், உண்மையும், அன்புமே எஞ்சி இருப்பவை.

மேலும், மகிழ்ச்சிக்கும் அமைதிக்கும் ஒளியூட்டுதல் நிலை நாட்டப்படுகிறது.

ஆனால், இவை பெருமையானவை என அறிவதற்கில்லை.

வீணானவனாலும் மதிகெட்டவனாலும் அவற்றைப் புரிந்துகொள்ள முடியாது,

மேலும், தன்னலத்திற்கு உட்பட்டு இருப்பவனுக்கு அதன் அரும்புகழ் வெளிப்படுவதில்லை.

இருளினால் எதை வெளிக்காட்ட முடியும்?

இருளில் நடப்பவன், எதைக் காண்பான்?

தற்பெருமை கொண்டவர்கள் இருளினால் குருடாக்கப் படுகின்றனர்;

வீணர்கள் தட்டுத் தடுமாறித் தங்கள் வழியைவிட்டு விடுகின்றனர்,

துயரமும் பாழ்நிலையுமே தன்னலத்தின் முடிவாகிறது.

பணிவை அறிவுறுத்தி ஒளியூட்டுதல் படிப்பைவிட மேலானது;

கீழ்ப்படிதலின் ஆற்றல் வெற்றி ஈட்டிய பலரின் வன்மையைவிட அதிகமானது,

எவன் தனது மனத்தைப் பணிவுள்ளதாக ஆக்குகிறானோ அவன் தன்னைத்தானே ஒரு பாறையின்மேல் நிலை நாட்டுகிறான்.

தற்பெருமை வாய்ந்தவர்கள் எப்படி நிலைத்து நிற்பார்கள்?

தங்களின் வலுவின்மையால் அவர்கள் வீழ்ச்சியடைகிறார்கள்.

வீணர்களால் எப்படித் தாங்கிக்கொள்ள முடிகிறது?

தாங்கிக்கொள்ள பிடிப்புஇல்லாத நாணலைப் போன்றவர்கள் அவர்கள்.

தன்னலத்தில் நாட்டங் கொண்டவர்கள் எப்படிச் சிறப்பு அடைவார்கள்?

அவர்கள் ஊதிவிடப்பட்ட வெற்று விதைகளுக்கு நிலம் இல்லாதது போன்றவர்கள்.

பணிவெனும் ஆடையை அணியுங்கள், நீங்கள் வீழ்ச்சி அடைய மாட்டீர்கள்;

உங்கள் உள்ளத்தை மென்மையானதாக்குங்கள், மலை போல் எதையும் தாங்கிக் கொள்வீர்கள்;

தன்னலத்தை அகற்றி விடுங்கள், உங்களின் தொழில்கள், நல்ல நிலத்தில் விதைக்கப்பட்ட விதையைப் போல் செழிப்பாக வளர்ச்சி பெறும்.

திமிர்பிடித்தவர்கள் தங்களை அரசர்களாக நினைத்துக் கொள்கிறார்கள்,

ஆனால், அவர்கள் அடிமைகளைவிடத் தாழ்ந்தவர்கள்,

தற்பெருமை கொண்டவர்கள் எவ்வளவு இலகுவாகப் புண்படுத்தப் படுகின்றனர்,

ஒவ்வொரு நாளும் துன்பத்தை நுகர்கின்றனர்;

வீணர்கள் அடிக்கடி துன்பப்படுத்தப்படுகின்றனர்.

அழுகையும் துயரமுமே அவர்களின் பங்கு, ஊழ்வினை;

தன்னலம் உடையவர்கள் எப்படி உடனுக்குடன் இழப்புகளால துன்பப்படுகிறார்கள்,

ஒவ்வொரு நாளும் தாங்கள் இழந்தவற்றிற்காக அழுகின்றனர்.

பணிவில் நோக்காடு இல்லை,

கீழ்ப்படிதல் துயரத்தை ஒழிக்கிறது.

தூய்மையான நெஞ்சத்தையுடையவர்களுக்கு துயர்பட வேண்டிய இழப்புகளில்லை.

ஒரு மாந்தன், எதை தனக்கென உறுதியாக வைத்துக் கொள்கிறான்?

எதைத் தாங்கிக் கொள்கிறான்?

அழிவற்ற நிலை எங்கே குடியிருக்கிறது?

உலகின் பொருள்கள் எல்லாம் அழிந்துகொண்டே போகின்றன,

அவற்றைப் பிடித்து வைத்திருக்க யாராலும் முடியாது;

உடலானது, மீண்டும் காணப்படாதவாறு அழிந்து போகிறது;

மாந்தர்களின் கருத்துகள் எல்லாம் விரைவாக அடிக்கும் காற்றில் புகைபோல் கொண்டு செல்லப் படுகின்றன.

புனிதத் தன்மையே தனக்கென வைத்துக் கொள் கிறது,

உண்மை பொறுமையுடன் தாங்கிக் கொள்கிறது,

தீய வினையில்லாத நெஞ்சங்களில் இறவா நிலை வாழ்கிறது.

நான் உலகு எங்கிலும் தேடினேன், ஆனால் அமைதி அங்கே இல்லை;

நான் கல்வியுடன் பிணைந்தேன், ஆனால் உண்மை புலப்படவில்லை;

மெய்ப்பொருளுடன் இடை இடைதொடர்பு கொண்டிருந் தேன், ஆனால் என் நெஞ்சம் ஆகுலத்தால் புண்பட்டது.

அப்போது, "அமைதி எங்கே உள்ளது? உண்மையின் மறைவிடம் எங்கே உள்ளது" எனப் புலம்பி அழுதேன்;

கீழ்ப்படிதலில், பணிவில் அமைதியைக் கண்டேன்,

நேர்மையைக் கடைப்பிடிப்பதில் உண்மை வெளிப் பட்டது;

தன்னலத்தை ஒழிக்கும்போது, தற்பெருமை தரும் நோக்காட்டின் முடிவை அடையக் கூடியதாக இருந்தது.

வாழ்க்கைப் பயணத்தில் ஈடுபட்டுள்ள பயணிகளே! நன்றாகத் தாழ்ந்து பணியுங்கள்;

துயர்படுபவர்களும் எவ்வகை ஆதரவு அற்றவர் களுமாகிய நீங்கள் நெடுசாண்கிடையாக விழுங்கள்;

புண்படுத்தப்பட்டு அதனால் துன்புறுகிறவர்களே!

நீங்கள் பற்றிக் கொண்டிருப்பதை விட்டுவிடுங்கள்;

ஏனெனில், தானே தாழ்ந்து கொள்பவன், நிமிர்ந்து கொள்வான்;

விழுந்தவன் எழுந்திருப்பான்;

எவன் தன்னலத்தைத் துறக்கிறானோ, அவன் தனது துன்பங்களின் முடிவைக் காண்பான்.

பணிவின் நுழைவாயில் ஒடுக்கமானது, தாழ்வானது;

குனிந்து பணிந்து அதில் நுழைபவனே என்றென்றும் நிலையாக அங்கு நிற்பான்.

## ஊக்குவித்தல்—3

### அன்பு

நிறைவான அன்பைச் செலுத்த மானிடர்க்கு ஊக்குவிக்கிறேன், மிகவும் உயர்வானவர் மேலுள்ள அன்பும்கூட.

அன்பை நன்கு உணர்கையில் எவ்வளவு அழகானது!

ஆழ்ந்து எண்ணும்போது, எவ்வளவு அரும்புகழ் மிக்கது!

அதனைப் பயிற்சி செய்து நடைமுறைப்படுத்தும்போது எப்படி இனிமையாகவும் நிறைவான மகிழ்வையும் அளிக்கிறது!

அன்பைக் கண்டு கொள்வது நிறைவான நிலையை அடைவதற்கே;

அன்பை அறிவது, என்றென்றும் நிலைத்திருப்பதை அறிவதற்கே;

அன்பைப் பயின்று நடைமுறைப்படுத்துவது உண்மையை ஆழ்ந்து அறிவதற்கே.

ஆனால் அன்பை எப்படிக் காணமுடிகிறது?
உள்ளத்தில் அது எவ்வாறு வெளிப்படுகிறது?
எவ்வாறு நடைமுறைப்படுத்துவதும் ஆழ்ந்துஅறிவதும்?
பங்காளியாக இல்லாமல் விடுவது,
வெறுப்பை நடைமுறைப்படுத்தாதிருப்பது,
சண்டை சச்சரவுகளில் ஈடுபடாதிருப்பது,
வஞ்சனை, ஏமாற்றைக் கடைப்பிடிக்காதிருப்பது,
பேராசைப்படாதிருப்பது,
பழிவாங்காது இருப்பது,
நிந்திக்கவோ தண்டிக்கவோ விரும்பாதிருப்பது,
இவ்வாறு செய்வதெல்லாம் அன்பைப் பெறவே.
வெறுப்பை அகற்று,

ஆகுலத்திலிருந்தும் தற்பெருமையிலிருந்தும் மனத்தை விடுவிப்பது,

ஐயத்தையும் அச்சத்தையும் கலைத்து ஒழிப்பது,

ஆசையின் கறைகளை அகத்திலிருந்து கழுவுதற்கே.

தூய்மையைக் கெடுக்கும் ஒவ்வொரு கெடுதலில் இவற்றையெல்லாம் செயல்படுத்துவது அன்பை அறிந்து கொள்வதற்கே.

எப்போதும் பொறுமையுடன் இருப்பது,

அமைதியை உயர்வாகக் கடைப்பிடிப்பது,

புனிதத் தன்மையை இழக்காமல் இருப்பது,

மிகக்கூடிய அளவுக்கு பிழை பொறுப்பது,

நண்பர்களைப்போல் பகைவர்களையும் சமமாகக் கருதுவது—

இவற்றையெல்லாம் கைக்கொள்வது அன்பைப் பற்றி ஆழ்ந்து அறிவதற்கே.

எங்கே அன்பு நிலைக்கிறதோ, அங்கே வெளிச்சம் நிலைக்கிறது.

எங்கே அன்பு இல்லையோ, அங்கே வெளிச்சம் ஊடுருவிச் செல்ல முடியாதவாறு கடும் இருளைக் கொண்டிருக்கும்.

எங்கே அன்பு உளதோ, அங்கே வாழ்வும் நிலைக்கிறது.

எங்கே அன்பு இல்லையோ, அங்கே மீள முடியா இறப்பு உள்ளது.

எங்கே அன்பு உளதோ, அங்கே உண்மை உண்டு;

எங்கே அன்பு இல்லையோ, அங்கே தவறுகளும் குழப்பங்களும் உண்டாகின்றன;

அன்பே உண்மையாக இருப்பதனால் அன்பு மாறுவதில்லை;

அன்பு நிறைவானது, அதனால் அது தீங்கு செய்வதில்லை;

அன்பு என்றும் நிலையானது, அதனால் அது துயர்படுத்துவதில்லை;

அன்பு இறவா நிலையுடையது, அதனால் பிறப்பாலும் இறப்பாலும் அது தாக்கப்படுவதில்லை.

உலகம் எவ்வளவு பொய்த்தோற்றத்தை உடையது!

உலகத்திலுள்ள இன்பங்கள் எவ்வளவு விரைவானவையாகவும் வெறுமையாகவும் இருக்கின்றன!

அன்பு எவ்வளவு மெய்ம்மையானது!

உண்மை நிலை எவ்வளவு அமைதி நிறைவானது, உறுதியானது!

மாந்தர்கள் பின்தொடருபவை எவ்வளவு வெறுமையானவை!

தன்னலத்தினால் ஏற்படும் சோர்வு எவ்வளவு சுமையானது!

ஆனால், நேர்மையைக் கடைப்பிடிப்பது பயனுள்ளது.

உண்மையில் எழும் அமைதி இனிமையானது.

அன்பு உள்ளவர்களிடம் எல்லாமே உள்ளன.

அன்பில் குடியிருக்கிறான் இறைவன்,

அன்பில் பெருமைமிக்க மெய்ம்மை வாழ்கிறது;

வியப்புக்குரிய அமைதி அன்பில் மட்டுமே காணப்படுகிறது.

மிக்க உயர்வான தூய்மை அங்கே உள்ளது,

அத்துடன் மேன்மை மிக்க பணிவும்கூட.

எவன் தனது உள்ளத்தை அன்பிற்கு இணங்க வைக்கிறானோ, அவனே நிறைவானவன்.

தன்னலத்தில் நாட்டம் கொண்டால், உன்னிடமிருந்து அன்பு பிரித்து எடுக்கப்படும்.

அன்பை நாடு, ஆம், அது உன்னிடத்திலேயேஉள்ளது!

அறிவொளியை யார் தேடுகிறார்களோ?

உண்மையை யார் நாடுகிறார்களோ?

அன்பை யார் வேண்டி நிற்கிறார்களோ? அவர்கள் வந்து சொல்லட்டும்—

தூய்மைக்கான கதவுகள் திறக்கப்படும்!

பணிவுக்கான உனது குறுகியநுழைவாயிலை இனிமேல் மூடி வைக்க வேண்டா!

என்றென்றும் நிலைத்திருக்கும் அன்பின் கதவுகளை விரிவாகவே திறந்துவிடுங்கள்" என்று

அகத்தும் புறத்தும் அவரின் குரல் கேட்கப்படும்.

அவன் வீணாகவே புலம்பி அழவோ வழியை இழக்கவோ மாட்டான்.

ஆனால், அவன், அந்த வழியே என்றும் நிலைத்திருக்கும் ஆறுதல் நிலையை அடைவான்.

## அறிவூட்டல்

### ஆசான்

பணிவானவர்க்கும், புரிந்து கொள்வதற்கு விருப்பமானவர்க்கும், அதற்கு அணியமாகவுள்ளவர்க்கும்—

வெளிச்சத்தை கூர்ந்து அறிவதற்காக இருளில் அலைந்து கொண்டிருப்பவர்க்கும்—

இப்போது வந்து கேளுங்கள்;

மகிழ்ச்சி அடையுங்கள்;

தூய்மை ஆரவாரத்தில் வந்து சேருங்கள்.

உணர்வுகளினால் ஆசான் தெரியமாட்டார்,

காரணத்தினால் புரிந்துகொள்ளப்பட முடியாதவர்,

தருக்கத்தினால் உணர்ந்து கொள்ள முடியாதவர்.

மலைகளிலோ, பள்ளத்தாக்குகளிலோ அவரைப் பார்க்க முடியாது.

மண்ணிலோ விண்ணிலோ வேறு எந்த வெளிப்படையான பொருள்களிலோ காண முடியாதவர் அவர்.

கொள்கைகள், கழகங்கள், நூல்கள்—இவை எவையும் அவரை தன்னகத்தே வைத்திருக்க முடியாதவர்.

அவர் தன்னுள்ளே வாழ்பவர்.

ஓ சோர்வுற்றவனே! நீ வெளிப்புறத்தே தேடுவதை விட்டுவிடு!

இரவுகளின் குழந்தையே! நீ அலைந்து திரிவதை விட்டுவிடு!

உனக்குரிய உள்ளத்திலே அவர் குடியிருக்கின்றார்;

உன்னிடமிருந்து அவர் மறைந்திருக்கவில்லை, ஆனால் உன்னாலேயே மறைக்கப்பட்டிருக்கிறார்.

உன் மனத்தின் குரலே அந்த ஆசான்.

வெளிச்சத்தின் உட்புறத்திலும்,

அமைதியின் அடித்தளத்திலும் அவர் உள்ளார்.

உற்றுப் பாருங்கள்! ஆசானின் குடியிருக்கும் இடத்தைக் காண்பிக்கிறேன்.

அது தூய்மையாக்கப்பட்ட உள்ளம்.

தன்னலப் பிணைப்புகளைத் தகர்த்தவர்கள்,

ஆசைகளை வெட்டி வீழ்த்தியவர்கள்,

அலைவற்ற வெற்றிகொள்ளப்பட்ட அமைதியான மனம் படைத்தவர்கள்,

உளைவற்றதும் மென்மையானதும் அமைதி மனத்தை உடையவர்,

ஆசானின் முன்னே நுழைந்தவர்கள் ஆகிறார்கள்;

அவர்களுக்கே ஆசானின் நற்புகழும் வெளிப்படுகிறது!

ஓ, கதறிஅழுதும் எவ்வகை விடையும்பெறாதவர்களே!

ஓ, அலைந்து திரிந்தும் ஆறுதல் அடையாதவர்களே!

ஓ, தேடியும் வெளிச்சத்தைக் காணாதவர்களே!

உங்களது, சோர்வுற்ற உள்ளத்துடன் வாருங்கள்;

உங்களது குருட்டு மனப்பான்மையுடன் இங்கு வாருங்கள்,

வந்து, புனிதமான அறிவுரைகளைக் கேளுங்கள்,

அவற்றைக் கேட்டபின், நிறைவும் ஆறுதலும் அடையுங்கள்,

பல உண்மைகள் இருந்தாலும் ஓர் உண்மையே அங்கு உள்ளது,

அதுவே தூய்மையான உள்ளம், மிக்க உயர்வான நிறைவான வாழ்வு;

காப்பவர்கள் பலர் இருந்தாலும், அங்கு மீட்பவர் ஒருவர் உள்ளார்.

அவரே மிக்க உயர்வான அறிவொளியூட்டுபவர்கூட,

ஆசிரியர்கள் பலர் இருந்த போதிலும் அங்கு ஓர் ஆசிரியர் இருக்கின்றார்,

அவரே, நேர்மையை மிகுபுகழுடன் வெளிப்படுத்துபவர்.

அங்கே பல தலைவர்கள் இருந்தாலும் அவர் ஒருவரே தலைவர்.

அவரே உண்மையின் மெய்ப்பொருள்;

மேலும், உண்மையானவர், காப்பவர், ஆசிரியர், தலைவர் எல்லாமே ஒன்றாக உள்ளவரும் அவரே.

எளிமையான தவறில்லாத வழியே தலைவரிடம் அழைத்துச் செல்கிறது.

உனது தன்னலத்தை வெற்றியடைந்தால், ஆசானின் முகத்தை நன்கு பார்க்க முடியும்.

தன்னலத்தைப் பற்றிக் கொண்டிருந்தால், நீங்கள் அவரைக் காண முடியாது;

தன்லைத்தைத் துறந்து விடுங்கள், ஆம்! ஆசான் உங்களுடனேயே வாழ்வார்;

தூய்மையில்லாதவர் தூய்மையானவர்களைக் காண மாட்டார்கள்;

இருள் வெளிச்சத்தை ஊருவிச் செல்லாது;

அழிந்துபோகும் தன்மையிலிருந்து அழியாத் தன்மை மறைந்து விடுகிறது.

ஆகையால், நீங்கள் பற்றிக் கொண்டிருப்பவற்றை விட்டுவிடுங்கள்.

உங்களின் ஆசைகளை ஒழித்துவிடுங்கள்;

அப்போது, ஆசானின் நிறைவு உங்களை நிறைத்து விடும்.

உங்களின் எண்ணங்களை அழித்துவிடுங்கள்.

அப்போது ஆசானின் ஒளி உங்களை ஒளியாலே அணி செய்யும்.

அழியும் தன்மை உள்ளவற்றிற்கும் மறையும் தன்மையானவற்றிற்கும் பின்னாலே செல்லாதீர்கள்;

அப்போது அழிவற்றவரும் என்றும் நிலைக்க வல்லவருமானவரின் உடைமையாகுறீர்கள்;

ஆசானுடன் ஒன்றாகி விடுவீர்கள்;

அதனால் அழிவற்ற நிலையில் அவருடனேயே வாழ்வீர்கள்.

ஆசான் காத்திருக்கிறார்,

ஆம்! என்றென்னும் காத்திருக்கிறார்,

பொறுமையே அவரின் திருப்பெயர்;

கருணையிலிருந்து அவர் விடுபடுவது இல்லை;

நேர்மை எங்கே நிலைக்கிறதோ அங்கே அவர் வாழ்கிறார்.

அன்பில் மறைந்திருப்பவர் அவரே;

அன்பைப் பெறுங்கள், அவரை அங்கே காணலாம்.

அறிவொளி அவரை மூடியிருக்கிறது;

அறிவு ஆற்றலைத் தூய்மையாக்குங்கள், அப்போது அவரை அறிய முடியும்.

உண்மையின் புகழ் அவரைச் சூழ்ந்திருக்கிறது;

தன்னலத்தை விட்டுவிடு, அப்போது அவரின் வடிவத்தைக் காண முடியும்.

உண்மையை உன்னால் ஏன் அறிந்து உணர முடிவதில்லை?

ஆசானின் குரலை ஏன் உன்னால் கேட்க முடிவதில்லை?

உன்னுடைய தவறுகளினால் நீ உண்மையை அறிந்து கொள்வதில்லை;

ஆசானின் குரலை உன்னால் கேட்க முடியாததற்குக் காரணம் தன்னலக்குரல்கள் உன் உள்ளேயே கூக்குரலிட்டுக் குழப்பத்தை உண்டுபண்ணுகின்றன.

பகலவனின் முகத்தை முகில்கள் மறைப்பதுபோல' தவறுகளான முகில்கள் ஆசானின் முகத்தை மறைக்கின்றன;

ஆம்! தீய வினையின் சுமைமிக்க முகில்கள் மாந்தர்களிடமிருந்து பிரித்து மூடிக்கொள்கின்றன.

அங்ஙனமாயின் ஆசானைக் காணக் கூடியவர்கள் எவர்?

அவரை அறிந்து உணரவல்லவர் யார்?

அவருடன் வாழக்கூடியவர்கள் யார்?

அவரின் குரலைக் கேட்கக்கூடியவர்கள் யார்?

எவர், தூய்மையான நெஞ்சம் கொண்டவரோ, பண்பாகவும், அருள் உள்ளம் கொண்டவராகவும் இருக்கிறாரோ, சினத்திற்கு மாறாய்ப் பணிவாகவும் வெறுப்பிற்கு மாறாய் அன்பாகவும் உள்ளாரோ, பழிப்பினை மன்னிக்கும் தன்மையும் குறை கூறும்போது அமைதியாகவும் நடந்து கொள்கிறாரோ, அவரே ஆசானைக் காணவும், அவரை அறிந்து உணரவும், அவரின் குரலைக்கேட்கவும், அவருடன் வாழக்கூடியவராகவும் உள்ளார்.

அதனால், பணிவு எனும் உடையை நீயாகவே அணிந்து கொள்;

உன் தவறுகளையும் உன் ஆழமான தீவினைகளையும் கூட ஏற்றுக்கொள்.

அவ்வாறு, தவறுகளை நீயே ஏற்றுக் கொள்வதனால், அன்பின் வழியை நீ கண்டு கொள்வாய்.

அப்படி அன்பைக் கண்டு கொண்டதும், ஆசானையும் கண்டு கொள்வாய்.

அதன்பின் நீ ஆறுதல் அடைவாய்.

தன்னலத்தை நீயாகவே மறுத்துவிடு.

உன்னையே கட்டுப்படுத்திக் கொள்;

உன்னை நீயே வெற்றி கொள்;

நல்லெண்ணம் உன்னைவிட்டு அகலாவண்ணம் பார்த்துக்கொள்.

எல்லோருடனும் நட்புறவாக இரு. ஆம்! விலங்குகளுடனும் கூட.

அப்பொழுதுதான் மிக உயர்ந்த உண்மை உன்னுள் வந்து அமர்ந்து கொள்ளும்;

உனக்கு ஆசானின் உள்ளம் வெளிப்படுத்தப்படும்;

துயரமும் துன்பப்படுதலும், அச்சமும் ஐயமும் உன்னை விட்டு வெகுதொலைவு சென்றுவிடும்,

அப்போது அழிவில்லாத தன்மை வாய்ந்த அறிவு அமைதியுடன் உனது நெஞ்சத்தில் நிரம்பும்.

அவ்வாறாகவே, ஆசானின் உள்ளம் அறிமுகப் படுத்தப்படுகிறது.

அவரை ஏற்பதற்கு உறுதியுடன் அணியமாக இருப்பவர்களுக்கு அவர் வெளிப்படுகிறார்.

## அறிவுறுத்தல்

### பொது அறம்

பணிவானவர்க்கும், உண்மையானவருக்கும் பணிவையும் உண்மையைத் தேடிக் கொண்டிருப்பவர்க்கும்—

மிக உயர்வான, தன்னிகரற்ற பொது அறக்கட்டளை.
அதுவே அந்த நல்லவரின் கட்டளையும்,
தீமை எனப்படுவதைச் சிந்திக்காதே;
தீமை எனப்படுவதைச் சொல்லாதே;
தீமை எனப்படுவதைச் செய்யாதே;
எது நல்லதோ, அதையே சிந்தனை செய்,
எது நல்லதோ அதையே சொல்;
எது நல்லதோ அதையே செய்.

அப்போது அந்த அறக்கட்டளைகளை உன்னால் அறிய முடியும்;

வேறு எந்த வழியிலும் அதனை அறிய முடியாது.

அந்த அறக்கட்டளைகளைப்பற்றிய அறிவு நெஞ்சத்தை மகிழ்விக்கிறது.

மனத்தை அது களிப்பினால் நிறைக்கிறது;

எல்லாத் துயரங்களையும் அழிக்கிறது, போக்குகிறது.

அந்த அறக்கட்டளையை அறிந்தவனை அல்லல்கள் அவனை விட்டு நீங்குகின்றன.

தீயவினையும் துயரமும் துயர்ப்படுத்தினாலும் அவனை விட்டு விலகுகின்றன.

அவன் எங்குச் சென்றாலும், அவனை அமைதி பின்தொடர்கிறது.

அந்த அறக்கட்டளையை அறிந்து உணர்ந்தவன் மகிழ்ச்சி அடைகிறான்.

அதனைப் பயிற்சி செய்து நடைமுறைப்படுத்துபவனே பேறு பெற்றவன்;

அதனுடன் ஒன்றாகிறவனே புனிதனாகிறான்.

அதனைத் தேடிச் சோர்வுற்று, நம்பிக்கை இழந்தவர்களே வாருங்கள்!

பணிவு எனும் புழுதியில் நெடுசாண்கிடையாக, நீங்களாகவே விழுங்கள்;

முற்றாகவே உங்கள் தன்னலத்தைப் போக்கிவிடுங்கள்.

தற்பெருமை கொள்ளக்கூடிய எல்லாவற்றையும் விட்டு விடுங்கள்;

ஆம்! எல்லாவற்றையும் துறந்து விடுங்கள்.

தாழ்மை எனும் நுகத்தை மாட்டிக் கொள்ளுங்கள்.

அப்போது அறக்கட்டளை பற்றிய அறிவிற்குள் நீங்களாகவே நுழைவீர்.

அதன்பின்னரே, நல்லவரின் அறக்கட்டளையின் மூன்று பெயர்களையும் நீங்கள் அறிவீர்கள்—

முதலாவது—அறம்;

இரண்டாவது—நேர்மை;

மூன்றாவது—அன்பு.

தன்னலத்தை விரும்பும் மாந்தர்கள், இந்த உயர்வான பெயர்களை ஏற்க மறுக்கின்றனர்.

அதனால் அந்த நால்வரின் அறக்கட்டளையைப் பற்றி அவர்களுக்குத் தெரிவதில்லை.

இருளிலே நடமாடித் திரிவதனால், வஞ்சனை மிக்க இடங்களில் விழுந்து விடுகிறார்கள்.

அதனால், அச்சமும் ஐயமும், துன்பமும் துயர்படுதலும் அவர்களுடன் வாழ்கிறது.

உள்ளார்ந்த நேர்மையைக் கடைப்பிடியுங்கள்.

அப்போது, சொற்களாலே விளக்க முடியாத அந்த மூன்று பெயர்களின் புகழை அறிவீர்கள்.

நால்வரின் அறக்கட்டளையை நீங்கள் அறிந்து உணர் வீர்கள்.

உங்களிலே இன்பமும் நட்பமைதியும் நிரம்பும்.

அறக் கட்டளையை அறிவதற்கு;

அதனைப் பணிவதற்கு;

அதனைப் பயிற்சி செய்து நடைமுறைப் படுத்துவதற்கு,

ஒன்றே ஒன்று, அதுவே தீர்வு, பாதுகாப்பு.

அது ஒன்றே தவறிலிருந்தும் ஆறுதல் இன்மையினின் றும் விடுதலை பெறுவது.

நல்லவரின் அறக்கட்டளை உயர்வு மிக்கதும், புகழ் மிக்கதும் ஆகும்;

எந்தப்பயணியின் பாதம் அறக்கட்டளைக்குப்பணிவாக நடக்கிறதோ, அவனே மிக உயர்வான பேறுபெறுபவன்.

அறக்கட்டளையின் அறிவே உயர்வுமிக்க அமைதியை அளிப்பது;

எவன்— "தன்னலத்தில் இனிமேல் பற்றுக் கொள்ள மாட்டேன்

சண்டை சச்சரவுகளில் இனிமேல் ஈடுபட மாட்டேன்.

இனிமேல் பழி வாங்க மாட்டேன்.

மதிப்பீடு செய்து இனிமேல் குற்றம் காண மாட்டேன்.

இதுவரை, தன்னலத்தைப் பற்றியிருந்தேன்.

தன்னலத்தை நிறைவு செய்ய முயன்றேன்;

என்னையே பாதுகாக்கவும் எனக்காக எதிர்க்கவும் செய்தேன்.

ஆனால், இப்போது நான் தன்னலத்தை விட்டு விட்டேன்.

எனக்காக எதிர்க்காமல் ஈகம் செய்வேன்.

ஆம்! அது மிகக்கூடிய துன்புறுத்தல், எனதாகவே இருக்கும்.

நான், எல்லா மாந்தர்களையும் விரும்புவேன், என்னை மட்டுமே நான் வெறுப்பேன்.

பணிவெனும் ஆடையால் என்னைப் போர்த்திக் கொள்வேன்

நேர்மையும் அன்பும் என்னைப் பாதுகாப்பவை ஆகும்.

மிக உயர்வானவரையே நான் புகலடைவேன்.

நல்எண்ணம் எனது வழிகாட்டியாகும்.

கருணை என்னைவிட்டு அகலாது.

உண்மையின் புனிதமான அன்பு, என் எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் வழிகாட்டும்.

இவ்வாறாக, நான் பாவங்களிலிருந்து விடுபடுவேன்.

உயர்வுமிக்க நல்லதை நடைமுறைப்படுத்துவேன்."

இவ்விதம் எவன் உறுதி கொள்கிறானோ, அவனே அறக்கட்டளையை அறிவான்.

நல்லவரின் அறக்கட்டளை அறிந்து உணரப்படும்.

அதன் மேன்மையின் நிறைவு அவனுக்கு வெளிப்படும்.

அத்துடன், எல்லாத் தீங்குகளிலிருந்தும் காப்பாற்றப் படுவான்.

ஆகவே, நல்லவரின் மாந்தன் நம்பிக்கை வைக்கட்டும்.

நல்லவரைப் பற்றிக் கொள்ளட்டும்.

நல்லவரைப் பின் பற்றட்டும்.

அவ்வாறே அவன் தன்னைப் பற்றி அறிந்து கொள்வான்.

தன்னைப் பற்றி அறிவதனால் இந்தப் புவியையே அறிந்துணர்வான்.

அப்பொழுது அவன் அமைதியை அடைவான்.

ஒருவனின் உடலில் அழுக்குப் பிடித்ததும், அவன் அதனைக் கழுவித் தூய்மைப்படுத்துவதில்லையா?

அதேபோல்—

ஒருவனின் நெஞ்சம் அழுக்குப் பிடித்ததும், அவன் அழுக்கை அகற்றித் தூய்மையாக்குக.

தீயவினைகளைக் கழுவுதற்கு ஐந்து வகையான நீர்கள் உள்ளன:

தூய்மை—அது கவர்ச்சிகளையும், அவற்றிற்கு இடம் கொடுத்தலையும் கழுவி விடுகிறது.

இரக்கம்—அது தன்னலம் நாடுவதையும் புறக்கணிப்பதையும் கழுவி விடுகிறது.

பணிவு—அது எல்லா வெறுப்புகளையும் தற்பெருமை கொள்வதையும் கழுவி விடுகிறது.

மகிழ்ச்சி—எல்லாப் பேராசைகளையும் பொறாமைகளையும் கழுவி விடும்.

அன்பு—எல்லா வெறுப்புகளையும் குறை கூறுதலையும் கழுவி விடுகிறது.

யாராக இருந்தாலும் வரட்டும், வந்து தூய்மையாகுக. அந்த நீர்கள் அணியமாக உள்ளன.

போற்றுதற்கு உரியவன் எவனோ அவன் தீவினைகளிலிருந்து விடுதலை பெறுகின்றான்.

அவனுக்கு உயர்வுமிக்க நல்லறத்தின் கட்டளை தெரிகிறது, அதனால் அவன் அதில் குடியிருக்கிறான்.

அவ்வாறாகவே, நல்லனவற்றின் அறக்கட்டளை விளக்கப்படுகிறது.

அப்படியே மாந்தர்களின் நெஞ்சங்களில் ஆழ்ந்தகன்று பரந்திருக்கிறது.

# அறிவுறுத்தல்

## பெருமை மிக்க மெய்ம்மை

விழித்தெழுந்தவர்க்கும் ஒளிபெற்றவர்க்கும், விழித்தெழவும் ஒளிபெறவும் விரும்புகிறவர்க்கும்—

இருளும் வெளிச்சமும் அங்கே உள்ளன.

கனவு காண்பதும் விழித்தெழுவதும் அங்கே உள்ளன.

பொய்த் தோற்றமும் மெய்த் தோற்றமும் அங்கே உள்ளன.

இருளே பற்றிக் கொள்ளப்படுகிறது. வெளிச்சம் அன்று

கனவு காண்பவர் விழித்துக்கொள்ளும் தனது மனத்தை அறிவதில்லை.

பொய்த் தோற்றத்தில் அலைந்து திரிபவன் மெய்ம்மையான தோற்றத்துடன் பழக்கமில்லாதவன்;

அதனால்—இரண்டு வழிகளில் ஒன்றை அவன் விட்டு விட வேண்டும்.

இருளில் வாழ்பவன் எதையும் தன்னுடன் கூடவே காண்பது இல்லை.

அவனின் அடிகள் தட்டுத் தடுமாறுகின்றன, அவனுக்கு அவனின் வழி தெரிவதில்லை.

இருளைப் போக்கியதும், வெளிச்சத்திற்கு நீ வரலாம்.

வெளிச்சத்திற்கு வந்ததும், எல்லாப் பொருள்களையும் காணலாம்.

உனது அடிகளை உனக்குத் தெரிகிறது. அதனால் தட்டுத் தடுமாறாமல் நடக்கலாம்.

கனவு காண்பவரின் வழியோ திடமில்லாதது, நோக்காடு மிக்கது;

இன்பமும் திகிலும் அவனைத் துன்புறுத்துகின்றன.

தான் எங்கே நிற்கிறான் என்பது அவனுக்கே தெரிவதில்லை.

தன்னை அவன் கட்டுப்படுத்துவதில்லை. அதனால், மெய்ம்மையில்லாதவற்றின் பரிவில், தயவில் உள்ளவனாகிறான்.

ஓ, உறங்கிக் கொண்டிருப்பவனே! தன்னலக் கனவுகளை விட்டொழித்து விடு.

எழுந்திரு! காலை வேளைக்கு உனது கண்களைத் திற

உனது புனிதத் தன்மையை நீ அறிந்து உணர்வாய்.

பொய்த் தோற்றமான பாதையில் நடந்துசெல்பவனை, அவனின் நிழல்கள் சுற்றி வருகின்றன.

அவன் பொருளை அறிந்து உணர்வதில்லை.

நீர்க்குமிழிகளைப் பிடிப்பதனால், அவன் உறக்கத்தினாலும் ஏமாற்றத்தினாலும் சுடுபட்டுத் தீக்காயங்களுக்கு உள்ளாகிறான்.

அழியும் தன்மையுடையவற்றைப் பற்றிக் கொள்வதனால் அவன் புலம்புகிறான்.

மறைந்து போகும் தன்மை உடையவர்களைப் பின் தொடர்வதனால் அவன் ஆறுதல் இன்மையால் அல்லல் படுகிறான்.

பொய்த் தோற்றத்திற்கான பாதை வழியையும், அழிந்து போகும் உமது தன்னல வழியையும் விட்டுவிடு,

அப்போது, அழிவற்ற உண்மையை அறிவாய்;

அழுது புலம்புவதற்குப் பதில் மகிழ்ச்சி இடம் பெறும்,

பெருமை மிக்க மெய்ப்பொருளின் பெரும் புகழை காண்பதற்கு உனது கண்கள் திறக்கட்டும்

அந்தப் பெருமை மிக்க மெய்ப்பொருள் தான் என்ன?

அந்தப் பெருமை மிக்க மெய்ப்பொருளே கறைபடியாத உள்ளம்.

அறிவொளி ஊட்டப்பட்ட விளக்கம்,

தொந்தரவு செய்யப்படாத, நிறைவான அமைதியை உடைய ஓர் உள்ளுயிர்—ஆன்மா.

நேர்மையைக் கடைப்பிடிப்பதன் மூலமே அந்த பெருமை வாய்ந்த மெய்ப்பொருளை அறிய முடியும்;

தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்பவனால் மட்டுமே அதனை அறிந்துணர்வான்.

தன்னைத் தானே தூய்மைப் படுத்துபவன் மட்டுமே அதற்குள்ளே நுழைவான்.

எல்லா வகையான தீய செயல்களிலிருந்தும் விடுதலை பெறுபவனால் மட்டுமே அங்கு உறுதியாக நிலைக்க முடியும்.

எல்லாச் சமயங்களும் மறைகளும் அந்த மெய்ப் பொருளில் வந்து அடைகின்றன,

அவை அங்கு வந்து கூடி, பின்னர் மறைந்து போகின்றன,

ஏனெனில், அந்த மெய்ப் பொருளில் பாகுபாடுகள் இல்லை,

அங்குச் சண்டை சச்சரவுகளும், ஆறுதல் இன்மையும் புக முடியாது,

மேலும், எவன் அங்கு வருகின்றானோ, அவன் அமைதியினால் நிறைவு பெறுகின்றான்.

பெருமை வாய்ந்த வாழ்வின் மெய்ப்பொருளைப் புரிந்து கொள்ளவும்;

அதறகுள் சென்று அதன் நட்பமைதியை அறிந்து கொள்ளவும் கூடியவர் நீங்கள்!

பலவற்றின் பின்னால் ஒன்றைத் தேடுங்கள்,

ஆரவாரங்களுக்குப் பின்னால் உள்ள அமைதியைத் தேடுங்கள்,

தன்னலத்திற்குப் பின்னாலுள்ள உண்மையானதைத் தேடுங்கள்,

புனிதமான அமைதியை ஏற்படுத்துவது எதுவோ அதனைத் தேடுங்கள்,

அவை காலைப் பனிபோல் மறைந்து போகாமல் நிலையாக உள்ளன.

அறிவுடமை நிலைக்கிறது;

அன்பு நிலைக்கிறது;

அருளிரக்கம் நிலைக்கிறது;

உண்மை நிலைக்கிறது;

அதனால், தன்னலத்தை துறந்திடுங்கள்.

ஏனெனில், தன்னலனும் அதனுடன் உள்ள எல்லாமே அழியக் கூடியவை,

அவை, பொய்ம்மைக்கு உரிமையானவை!

அதனால், உங்கள் கனவுகளிலிருந்து விழித்து எழுங்கள்,

உங்களின் எல்லா நிழல் தோற்றங்களையும் தலைத்து விடுங்கள்,

உங்களின் எல்லாப் பொய்த் தோற்றங்களையும் அழித்து விடுங்கள்,

அப்போது, நீங்கள் அந்தப் பெருமை மிக்க மெய்ப் பொருளில் புகழலாம்;

அமைதியான நிறைவுடன் என்றும் நிலைத்திருக்கும் இணக்கம் உள்ள ஒத்திசைவில் இணைந்து விடலாம்;

பேரின்ப நிறைவுடன் என்றென்றும் நிலைத்திருக்கும் பாடலைப் பாடலாம்;

விண்ணையும் மண்ணையும் அதிர்ச்சி பெற வைக்கும் அந்தப் பாடல்.

உங்களதும் எனதுமான அந்தப் பாடலை நீங்கள் பாடுங்கள்—

பரிவிரக்க ஆசானுடன் அறிமுகம் செய்துகொண்டேன்;

நிறைவான அறக் கட்டளையெனும் ஆடையை அணிந்து கொண்டேன்;

பெருமை மிக்க மெய்ப்பொருளின் பேரசில் புகுந்து விட்டேன்.

ஆறுதல் அளிக்கப்பட்டது, அதனால் தேடி அலைவது முடிவுற்றது;

அமைதி இவற்றுள் ஏற்பட்டதனால், துயரும் நோக் காடும் ஒழிந்து விட்டன;

ஒற்றுமை தெளிவாக்கப்பட்டதனால், குழப்பம் கரைந்து விட்டது;

உண்மை வெளிப்படுத்தப்பட்டது, அதனால் தவறு மறைந்து விட்டது;

எவன் தன்னலனை விட்டுவிடுவதென உறுதி கொள்கிறானோ அவன் போற்றுதற்கு உரியவன்;

எவன் தூய்மையுடன் இருக்கிறானோ, அவன் புனிதமானவன்;

எனது தனது எனும் எல்லாவிதமான பொய்த்தோற்றங்களையும் அழிக்கின்றானோ அவனே புனிதமானவன்;

கடைசியில் அவன் பெருமை மிக்க மெய்ப்பொருளைக் கண்டு கொள்கிறான்.

அந்த ஆசான் திரும்பவும் வெளிப்படுத்தப்படுகிறார், அதனால், இப் புடவி பேரின்பம் அடைகிறது;

நல்லவரின் அறக்கட்டளை மீண்டும் விளக்கப்பட்டதனால், இப் புடவி மகிழ்ச்சி அடைகிறது.

அந்தப் பெருமை மிக்க மெய்ப்பொருள் மனத்தால் பற்றிக் கொள்ளப்படுகிறது, அதனால் இப் புடவி மகிழ்ச்சி அடைகிறது.

# பேருரை

## உண்மையின் வழி

### 1. தன்னடக்கம்

உண்மை என்பது என்ன?

நிறைவான செயல்பாடுகளின் அமைதியில் அது குடிகொள்கிறது.

அந்த அமைதி அறிவிலிகளுக்குப் போதுமானது.

ஆகவே, உண்மையைப் பற்றி நான் உரை நிகழ்த்தவோ கற்பிக்கவோ தேவையில்லை;

அங்குச் செல்வதற்கான வழிபற்றி சொல்கிறேன்:

ஏனெனில், உண்மை என்பது சொற்களினால் ஆனதில்லை, வாழ்க்கையினால் ஆனது;

உண்மையே நாளை ஆட்சி புரிகின்ற போதிலும், அது அங்கே இருப்புக் கொள்வதில்லை, அதன் இருக்கை நெஞ்சத்திலே உள்ளது.

மொழிகளால் விளக்க முடியாததற்கு எந்தச் சொற்கள் அதன் அழகை மிகுக்கும்?

மேலும், உண்மைக்கு மாந்தரால் என்ன புகழை அளிக்க முடியும்?

சொற்களால் விளக்க முடியாதது, சொற்களுக்கு அழகைக் கொடுக்கட்டும்;

ஆகவே, உண்மையினால் மாந்தன் புகழ்ச்சியைப் பெறட்டும்,

ஆகவே, உண்மைக்குச் சென்றடையும் வழியை நான் சுட்டிக் காட்டுகின்றேன்.

ஊக்கத்தினால் அந்த வழியை நான் காட்டவில்லை,

ஆனால் பயிற்சியினாலும் அதனை முழுமையாகப் பெற்றதனாலுமே அதற்கான வழியைக் காட்டுகிறேன்.

அந்த வழியே 'தன்னை வெற்றி கொள்ளல்' என அழைக்கப்படுகிறது.

நம்புகிறவர்களுக்காகவே நான் எழுதுகின்றேன்,

ஏனெனில், அவர்களே தன்னை வெற்றி கொள்ளப்படும் என்பதை நம்புகிறவர்கள்.

தன்னலம் வெற்றி கொள்ளப்படும் என்பதை மறுப்ப வர்களுக்கும், அதனைப் பெருமைப்படுத்தித் தன்னலத் திற்கு ஆட்சி அமைப்பவர்களுக்கும் இதனை நான் எழுத வில்லை.

எவன் நம்பிக்கை உள்ளவனோ, அவன் அந்த புனித மான வழியில் செல்வான்,

அவ்வாறு சென்று உயர்வுமிக்க உண்மையை அடைந்து விடுவான்.

அப்படியே நம்புகிறவன், தன்னை அணிமைப்படுத்திக் கொள்ளட்டும்:—

நம்பிக்கை எனும் முடியைச் சூட்டிக்கொண்டு,

பொறுமை எனும் படை தாங்கியவாறு,

உறுதியான தீர்மானம் எனும் கூரியவாளை ஏந்திச் செல்கிறான்,

தனக்குள்ளேயே உண்மைக்கு எதிராகவுள்ள பகைவர் களைத் தாக்குவநற்கு அணியமாகி விடுவான்;

உண்மைக்கான பயிற்சிகளைத் தொடங்குவான்;

பயிற்சியினால் அத் தொழில் கலைஞன் கைத்திறன் பெறுகிறான்,

பயிற்சியினால் உண்மையை விரும்பும் அவன் உண்மையை நிறைவேற்றும் ஆறறல் பெறுகிறான்.

உண்மையின் வழி மூன்று பயிற்சிகளினால் குறிக்கப் பட்டுள்ளது—

முதலாவது, தன்னைத்தானே அடக்குவது,

இரண்டாவது, தன்னைத் தானே ஆய்வு செய்வது,

மூன்றாவது, தன்னைத் தன்னிடமே புகலடைய வைப்பது.

இந்த மூன்றும் மற்றைய எல்லாவற்றையும் உள் அடக்குகின்றன.

தன்னை அடக்குவதில் பயிற்சி செய்ய மறுப்பவன்—

எவன் தன் நெஞ்சத்தினால்—

"நான் உண்பேன், அருந்துவேன், அத்துடன் இன்பத்தின் மாலைகளை அணிந்து கொள்வேன்"

என்று கூறுகிறானோ, அவனால் அமைதிக்கு அழைத்துச் செல்லும் வழியைக் கண்டுகொள்ள முடியாது.

ஆனால் எவன் தனக்குள்ளேயே—

"எவற்றிலிருந்து விடுபட வேண்டுமோ அவற்றை ஒழிப்பதில் ஈடுபடுவேன், அப்போது தூய்மையுடன் செயல் படுவேன்—

நாணயமே எனது நண்பன்,

நம்பிக்கை, எனது இருளுக்கு ஒளியூட்டும்,

ஆம்! சீரிய பண்பே எனக்குப் புகலாகவும்

எனது தங்குமிடமாகவும் அமையும்"

என்று கூறிக் கொள்கிறானோ அவன் உண்மைக்குச் செல்லும் வழியைக் கண்டு கொள்வான்,

ஓ! அவன் ஏற்கெனவே கண்டுவிட்டான்,

ஏனெனில், சீரிய பண்பின் பயிற்சியே அந்த வழியின் நுழை வாயில்.

பண்பிலி அழிக்கின்றான், பண்புடையவன் தட்டி எழுப்புகின்றான்;

தனது இன்பத்தைப் பற்றி மட்டுமே நினைத்துக் கொண்டு இருப்பவன்,

தன்னைத் தானே கொலை செய்து கொள்கிறான்;

தன்னை அடக்கிக் கொள்பவன் தன்னைக் காத்துக் கொள்கிறான்.

எதிர்பார்ப்பையோ கைம்மாற்றையோ விட நாணயத்தை நம்பியவாறு,

எவன் இன்பத்தைத் துறந்து தனது வெறி உணர்வுகளிலிருந்து தன்னைத் தடுத்துக் கொள்கின்றானோ,

அவன், நற்பண்பின் மகிழ்ச்சியில் பங்கு கொள்கிறான்;

அவனின் நட்பு இன்பமானதாக இருக்கும்,

அவனின் பற்று தூய்மையானது,

அவனின் வாழ்நாள்கள் நெடிதாகவும் பெருமையானதாகவும் அமையும்;

இவ்வாறு நற்பண்புடன் நடந்து கொள்ளும்போது மகிழ்ச்சி அவனுக்காகக் காத்திருக்கும்,

ஒரு பகுதியே புனிதமடைவது அவனின் பங்காகும்,

அதனால், அவன் முதலாவதாகத் தோன்றும் ஆறுதல் அளிக்கும் தங்குமிடத்தை வந்து அடைவான்.

இருந்த போதிலும், அவன் அங்கேயே தங்கி நிற்பதனால் உயர்வுமிக்க இடத்தை அடைய முடியாது.

## 2. தன்னை அறிதல்

எவன் மிக உயர்வானதைத் தேடிச் செல்கிறானோ, அவன் தன்னைத்தானே ஆய்வு செய்யும் பயிற்சியில் சேர்ந்து கொள்கிறான்.

எண்ணமெனும் மிகச் சிக்கலான நூலிழையைப் பின்பற்றிக் கொண்டும்,

தன் நெஞ்சத்தின் உள் மறைவிடத்தை தேடி,

அவனின் குறிக்கோள்களின் தன்மையைக் கடின மாகவே ஆய்வு செய்கையில்,

ஆசையின் மறைவான ஊற்றுகளைக் கண்டு கொள்வான;

அதோடு, வாழ்க்கை எனும் மரத்தின் அடி வேர்களை கண்டு வெளிபபடுததுவான்;

அப்போது என்றும் நிலைத்திருக்கும் குறிக்கோளைக் கண்டு கொள்வதால், நல்லது, தீயது, இரண்டையுமே அறிநது கொள்வான்;

மிக உயர்வானதை காண்பதனால், இனிமேல் அவனுக்கு அழிவில்லை.

அழகான மலர் உருவாகும்போது அதன் வளர்ச்சியைப் பார்க்க முடியாது இருப்பதைப்போல்,

மனிதர்களின் பார்வை படாமல் வளர்ச்சி பெறுவான்.

இருந்தும் மெய்யறிவு முழுமையாகவே வளர்ச்சி அடைவதுபோல், உண்மை எனும் மலர் அதன் முழு அழகையும் வெளிப்படுத்தும்போது,

அதன் அமைதியான வளர்ச்சி பற்றி மனிதர்கள் கூறு வார்கள்—

"இந்த மாந்தன் மெய்யறிவாளி, எப்போது இவன் தனது அறிவைப் பெற்றான்?

கற்றுக் கொள்ளாமலே இந்த மாந்தன் எப்படி எழுத்து களை அறிகின்றான்?"

கருவில் உள்ள ஒரு குழந்தையைப் போல,

நிலத்திலுள்ள ஒரு செடியைப் போல,

அணுகி வரும் ஒரு பயணியின் கண்களில் படும் ஒரு பொருளைப் போல,

உள்ளத்திலே மெய்யறிவு உருப்பெறுகிறது,

தன்னைத் தானே ஆய்வு முயற்சி எடுப்பவனின் அறிவு அவ்வாறே வளர்ச்சிபடைகிறது;

தீமையின் அடிவேரைக் கண்டு கொண்டவன், துறவு எனும் கைகளினால் அதனைப்பிடுங்கி எடுத்து அறிவு, எனும் தீயினால் எரித்துச் சாம்பலாக்குகின்றான்.

அவ்வாறு தன்னைத்தானே ஆய்ந்து கொள்பவன், உள்ளத்தின் அடிப்பகுதியைச் செம்மையாக்குவதுடன்,

மனத்திலுள்ள எல்லாத் தவறுகளையும் தவிர்த்துக் கொள்கிறான்,

தனது தவறுகளைத் தேடிக் கண்டுபிடித்து அவற்றைப் பணிவுடன் ஏற்றுக் கொள்பவன்,

மற்றவர்களின் தவறுகளில் வாழ்வதற்கு விரும்ப மாட்டான்,

அவனின் குறிக்கோளான நட்பமைதியை நோக்கி விரைவாகவே முன்னேறுவான்.

அவன், தனது உள்ளத்தைத் துப்பரவாக்குவான். விளங்கிக்கொண்டு, ஆறுதலை தூய்மைப்படுத்துவான்;

தன்னைத் தானே அடக்கிக்கொண்டு, அவன் மேலும் தன்னலக் கண்ணால் பார்க்க மாட்டான்;

உண்மையைப் பற்றிக் கொண்டு, உண்மையின் மறைக்கப்படாத கண்களினால் அதனை அறிந்து உணர்வான்;

அப்போது, தன்னைப் பற்றியும் உண்மையைப் பற்றி யும் அறிந்து கொள்வான்.

அவனின் செயல்கள் நேர்மையாகவே இருப்பதனால், அவனின் தொழில்கள் எல்லாம் சிறப்படையும்;

அவனது உள்ளம் தூய்மை உள்ளதால், அவன் நா அறிவானவற்றையே பேசும்;

அவனின் அடிகள் பட்ட இடங்களில் அன்பு மலர்களும் அமைதி மலர்களும் வளர்ச்சி பெறும்.

நேர்மை அற்றவர்களுடன் வாழ விரும்ப மாட்டான்.

அறிவீனத்தையும் தூய்மை அற்றவற்றையும் அவன் தவிர்ப்பான்;

அதனால், சண்டை சச்சரவுக்கும் வேற்றுமைக்கும் 'என்னிடமிருந்து விலகிக் கொள்' என்று கூறுவான்.

உட்புற அறிவிற்குத் தீயை மூட்டி,

அதன் சுடரை எப்போதும் ஒளிரச் செய்து,

பொறுமை, அன்பு, ஈக உணர்வூட்டி,

ஒரு மனிதன், தன்னுள் இருக்கும் அழியும் தன்மை யுள்ள எல்லாவற்றையும் எரித்து விடட்டும்,

அப்போதுதான் அவன், அழிவற்றவற்றை அறிய முடியும்.

தவறெனும் மாழையி(உலோகத்தி]ன் அழுக்கை அவன் நீக்கட்டும்,

அதனால் மட்டுமே உண்மை எனும் தங்கத்தைக் கண்டு கொள்கிறான்;

எல்லாத் தீய செயல்களையும் அவன் அழிக்கட்டும்,

கறைபடியாத அந்த ஒன்றை அவனால் காண முடியும்.

தனக்குள்ளே உள்ள மூலகாரணத்தைத் தேடும்போது, தீவிர உணர்வுகள் அவனுக்கு நோக்காடு தராது.

அந்த உணர்வுகளுக்கான மூல காரணத்தைக் கண்டு அதனை அழித்து விடுவான்,

தன்னைக் கட்டுப்படுத்தல், மனத்திற்கும் நெஞ்சத்திற்கும் அமைதியளிக்கும்.

அப்போது, நட்பமைதி வழியில் வெகு தொலைவு பயணம் செய்வான்,

இரண்டாவது தங்குமிடத்தைச் சென்றடையும்போது நிறைவான மகிழ்ச்சியையும் புனிதத் தன்மையையும் அவன் சுவைத்துணர்வான்.

இருந்தும், அங்கேயே தங்கியிருப்பதனால், அதி உயர்வானதைச் சென்றடைய முடியாது.

## தன்னிடம் தானே புகல் அடைதல்

தன்னைத் தானே நன்கு அடக்கிக்கொண்டு,

தன்னைத் தானே ஆழமாக ஆய்வுசெய்து,

அன்பை விரும்புபவன், இப்போது தன்னைப் புகழடைய வைக்கும் பயிற்சியில் ஈடுபடட்டும்.

தன்னடக்கத்தைப் பயிற்சிசெய்பவன், நல்ல முறையில் பயணம் செய்கின்றான்;

தன்னை அடக்கிக் கொள்பவனாலேயே உயர்வு மிக்கதைக் காண முடியும்.

எவன் தன் அடி உள்ளத்தைத் துறக்கிறானோ,

எவன் தனக்கென்று எதையும் வைத்திருப்பது இல்லையோ,

எவன் தன்னுடையதென்று எதையும் சொல்லாமல் விடுகிறானோ;

எவன், தனது உள்ளத்தை உலகியல் பொருள்களில் ஈடுபடுத்த மறுக்கின்றானோ,

தனது எல்லாவிதமான பேராசைகளையும் ஒரு பக்கத்தே ஒதுக்கிவிட்டுத் தன்னில் உள்ள தற்செருக்குகளை யெல்லாம் வெறிதாக்கி,

எவன் தன்னுடைய எல்லா கோட்பாடுகளிலிருந்தும் கருத்துகளிலிருந்தும் விடுபடுகிறானோ,

அவன் தனக்கென்று எதுவுமே இல்லாது, மறைவற்று வெறுமையாகின்றான்.

அப்படி வெறுமையானதும் அவனில் உண்மை நிறைகிறது

மறைவற்ற நிலை எய்தியதும் நேர்மையால் போர்த்திக் கொள்ளப்படுகின்றான்.

ஒன்றுமே இல்லாதவன் எல்லாவற்றிற்கும் தலைவனாகிறான்.

தன்னைப் புகலடைய வைப்பதில், முழுமையாகவே பயிற்சி எடுக்கும்போது அதிக உயர்வானதை அடைகிறான்

அப்போது, உண்மை அறிந்துணரப்படுகிறது. நிறைவான அமைதி நுகரப்படுகிறது.

தன்னைத்தானே புகலடைந்தவனை ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது.

இந்த உலகை வெற்றி கொண்டவனை ஒரு போதும் குழப்ப முடியாது.

பேரவாவின் தீச்சுடர்கள் அவனைச் சுட்டெரிக்கா;

ஏனெனில் அவற்றின் வேட்கையை அவன் தீர்த்துள்ளான்.

தீய கவர்ச்சிக்கான காரணத்தை அவன் அழித்துவிட்டதனால் அக் கவர்ச்சி அவனைச் சவுக்கடிக்கு ஆளாக்க முடியாது;

உண்மையில் அவன் முழுமை பெற்றுவிட்டதனால் தன்னடக்கம் இனிமேல் தேவைப்படாது.

தன்னலத்தினின்று விடுபட்டவன், துக்கத்திலிருந்து விடுபடுவான்.

தவறுகளிலிருந்து விடுபட்டவன், இனிமேல் துயரப்பட மாட்டான்.

தூய்மை இன்மையிலிருந்து விடுபட்டவன், நோக்காட்டிலிருந்து விடுபடுவான்.

உயர்வுமிக்க மகிழ்ச்சியில் சேர்ந்து கொள்வான்.

மேலும், இறுதித் தங்கும் இடத்தை அடைந்ததும் நிறைவான பேரின்பத்திலும் பங்கு கொள்கின்றான்.

அழியக் கூடியவற்றிற்கு மதிப்பு அளிக்காதவனை ஒருபோதும் திருட முடியாது.

தன்னை விரும்பாதவன் ஒருபோதும் துன்பத்திற்கு ஆளாக மாட்டான்.

அவனை மனிதர்கள் கொலை செய்யத் திட்டமிட்டாலும், அவன் ஒருபோதும் அழியான்.

ஏனெனில் அவன் இனிமேல் தன்னலமற்றவன், அவன் உண்மையாகின்றான்.

உண்மையை யாரால் அழிக்க முடியும்?

எல்லா உடல்களும் இறப்பினால் அழிகின்றன, அதனால் உண்மை இறப்பதில்லை, அழிவதில்லை.

எல்லாமே மறைந்து போகின்றன. ஆனால் உண்மை என்றென்றும் நிலைக்கிறது.

எவன் தன்னலத்தைப் புகலடைய வைக்கின்றானோ அவன் அழிவற்ற நிலையைப் பெறுகின்றான்.

இனிமேல், அவன் வேறுபடுதில்லை, ஆனால் உண்மையுடன் ஒன்றாகி விடுகிறான்.

மாந்தர்கள் இதனைத் தெரிந்து கொள்ளாத போதிலும் அவன் அந்த உயர்வு மிக்கதை தெளிவாகவே கண்டு கொள்கிறான்.

தன்னல அடக்கத்திலிருந்து பிறக்கிறது பண்பு,

தன்னையே ஆய்வதனால் அதிகமாகிறது அறிவு,

தன்னைப் புகலடைய வைப்பதிலிருந்து மலர்கிறது அன்பு.

தன்னைத்தானே அடக்கிக் கொள்பவன் மகிழ்ச்சி பெறுகின்றான்.

தன்னைத் தூய்மைப்படுத்துபவன் புனிதனாகின்றான்.

தன்னைத்தானே புகலடையச் செய்பவன் தெய்வீகமாகின்றான்.

ஒருவனின் வாழ்வு பண்பினால் ஆட்சி செய்யப்படுகிறது.

ஒருவனின் வாழ்வு அறிவினால் தூய்மையாக்கப்படுகிறது.

ஒருவனின் வாழ்வு அன்பினால் முழுமை பெறுகிறது.

பண்புதான் விதை. அறிவு செடி, அன்பு மலர்.

செடியை விதை அறிவதில்லை.

மலரைச் செடி அறிவதில்லை

ஆனால் மலர் தன்னையும் அறிகிறது, செடியையும், விதையையும் அறிகிறது.

தன்னல அடக்கத்தினால் தீய ஆசைகள் கொலையுறு கின்றன;

தன்னைத்தானே புகலடைய வைப்பதனால் பொய்த் தோற்றங்கள் கீழே வீழ்கின்றன

தன்னடக்கம், வன்மைக்கு வழி வகுக்கிறது.

தன்னை ஆய்வது அறிவுக்கு வழி காட்டுகிறது.

தன்னை புகலடையச் செய்வது தூய்மை பெற வழி வகுக்கிறது.

தன்னடக்கம், தன்னாய்வு, தற்புகழ்—இவற்றினால் மாந்தன் நிறைவு பெறுகின்றான்.

ஒரு மாந்தன், உயர்வுமிக்க நிலையை அடை கின்றான்.

உண்மையுடன் ஒன்றாகிய பின் மேலும் அலைச்சல் இல்லை.

பரிவிரக்கத்தில் மாறுபடாதவன்,

நேர்மையில் உறுதி பெற்றவன்,

புனிதத் தன்மையில் இணைபிரியாது இருப்பவன்,

இவனின் உள்ளம் எல்லோரின் உள்ளங்களுடன் உணர்ச்சியில் ஒன்றுகிறது.

முடிவில்லாத மகிழ்ச்சியை அறிகின்றான்,

பெருமைமிக்க நட்பமைதியைக் காண்கின்றான்.

கீழே உள்ளவர்களுக்குத் தலைவணங்கியதால் அவன் உயர்வுமிக்க நிலைக்கு உயர்த்தப் படுகிறான்.

தீவினையை வெற்றி கொண்டதனால் புனிதமான பொன்முடி அணிகின்றான்.

தன்னலத்தை மீள முடியாதவாறு ஓரிடத்திலேயே அறந்து விட்டதனால், அவன் உண்மையினால் புகழப்படுகின்றான்.

ஒன்றுமில்லாதவனாக விரும்பி, அவன் எல்லாமே பெறறவனாகிறான்.

தன்னிடமுள்ள எல்லாவற்றையும் அழிப்பதனால் எல்லாவற்றிற்கும் உடைமையாளியாகின்றான்.

தனது வாழ்வைக் கொடுப்பதனால், அழியாமையினால் தழுவப் படுகின்றான்.

எல்லா வகையிலும் ஒடுக்கமாகி, அவன் எல்லாவகையிலும் மகிழ்ச்சி பெறுகிறான்.

எல்லா வகையாலும் நேர்மையாகி, எல்லாவற்றாலும் வாழ்த்தப்படுகிறான்.

எல்லாவற்றிலும் தூய்மையாகி, அவன் எல்லாவற்றிலும் அமைதியடைகின்றான்.

பணிவில் அழகு,

அன்பின் மேன்மை,

கள்ளமற்ற தன்மையில் வெல்ல முடியாமை,

சொற்களினால் விளக்க முடியாததை அவன் வெளிக் கொணர்வான்.

சொற்களின்றிக் கற்றுக் கொடுப்பான்.

மேலும் தொந்தரவு இல்லை.

மேலும் புலம்பும் அழுகை இல்லை;

மேலும் நோக்காடு இல்லை;

உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து, குணமாகி நிறைவாக்கப்படுவான்;

உயர்வுமிக்க முகத்திலுள்ள திரையை அகற்றி விட்டான்,

மாட்சிமை மிக்க ஆறுதலை அவன் அறிகிறான்,

ஆழமான இன்னமைதி,

பரந்திருக்கும் நட்பமைதி,

இருளை அறியாத ஒளியில் அவன் நடக்கின்றான்.

அவன் ஒளியிலும், அவன் நடைவழியில் எல்லாம் அந்த நிழல் விழுவதில்லை.

□



த.கோவேந்தன் (1932) வட ஆர்க்காடு வேலூரில் பிறந்து - கற்று வளர்ந்து இன்று சென்னையில் தமிழால் வாழ்பவர். வானம் பாடி (1956) கவிதை ஏட்டினையும் கவிஞன் ஏட்டினையும் நடத்தியவர். பாரதிதாசனோடு 19 ஆண்டுகள் பழகியவர். தமிழாராய்ச்சியாளர் பாவலர், மொழி பெயர்ப்பாளர், திறனாய்வாளர், பதிப்பாசிரியர், முப்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் எழுதியவர். சோவியத்து நாடு இலக்கியப் பரிசும் பாரதிதாசன் விருதும் பெற்றவர். மணிவிழாக் கண்டவர்.